சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



வரமூர்த்திக்ஷேத்திரமென்னும்

# அரியதுறைதலபுராணம்.

## கத்தியரூபம்.

நயினுருப்பம்-சபாபதிசெட்டியார் குமாரர்

**ந. ச. அ. சதாசிவசெட்டியாரவர்கள்**

கேட்டுக்கொண்டபடி,

மதுரைத்தமிழ்ச்சங்கத்து மகாவித்துவான்

சித்தாந்தசரபம்—அஷ்டாவதானம்

**பூவை-கலியாணசுந்தரமுதலியாரவர்களால்**

இயற்றப்பட்டு,

ஸ்ரீ வரமூர்த்தீசுவரர் தேவஸ்தான தருமகர்த்தரும்,

அரியதுறை ஜமீந்தாரரும்,

திருப்பேர்கிராம சுரோத்திரதாரருமான,

நயினுருப்பம்

**ச. அப்புகுட்டிசெட்டியாரவர்களால்**

சென்னபட்டணம்

சைவவித்தியாநுபாலனயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1911.

சிவமயம்.

# விஷயவட்டவணை.


| எண். | | பக்கம். |
|---|---|---|
| ௧. | நைமிசாரணியச்சருக்கம். | ௨ |
| ௨. | உரோமசர்பூசித்தசருக்கம். | ௪ |
| ௩. | இந்திரன்பிரமகத்திசருக்கம். | ௮ |
| ௪. | முருந்தன்பூசித்தசருக்கம். | ௧௦ |
| ௫. | சிவபூசைமகிமை. | ௧௧ |
| ௬. | சித்திரசேனன்பூசித்தசருக்கம். | ௧௨ |
| ௭. | விபூதிமகிமை. | ௧௪ |
| ௮. | உருத்திராட்சமகிமை. | ௧௫ |
| ௯. | பஞ்சாக்கரமகிமை. | ௧௭ |
| ௧௦. | இந்திரன்பூசித்தசருக்கம். | ௨௧ |
| ௧௧. | கன்னிகைகள்பூசித்தசருக்கம். | ௨௩ |
| ௧௨. | கண்ணனரசமரமானசருக்கம். | ௨௮ |
| ௧௩. | பூத்தகுளமான்மியச்சருக்கம். | ௩௫ |
| ௧௪. | ஸ்ரீவரமூர்த்தீஸ்வரர்பதிகம். | ௩௮ |
| ௧௫. | ஸ்ரீமரகதாம்பாள்பதிகம். | ௪௧ |
| ௧௬. | புஷ்பாஞ்சலிசூர்ணிகை. | ௪௨ |
| ௧௭. | ஊசல். | ௪௨ |
| ௧௮. | எச்சரிக்கை. | ௪௩ |
| ௧௯. | லாலி. | ௪௩ |
| ௨௦. | மங்களம். | ௪௪ |

க்ஷாசீக்கங்கையானது அரியதுறையில் முகுந்தன்பொருட்டு உற்பத்தியாகி இன்றும்
அரணிநதியில் ஊடுருவிப்பாய்ந்துகொண்டிருப்பது
பிரத்தியட்சமகிமை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



# வரமூர்த்திக்ஷேத்திரமென்னும்

# அரியதுறைதலபுராணம்.

## கத்தியரூபம்.

### விநாயகர் காப்பு.

ஓமெனுநற்பிரணவமந்திரந்தனக்குப்பொருளாகியொளிரும்பெம்மான்
தாமெனவேயாவர்க்குந்தெரித்திடுவான் யானைமுகந்தன்னைவாய்ந்து
நாமெனுமோங்காரமடியவர்பாலுதியாமனனிமுறித்துத் [ற்றி
நிமெனுமும்மதக்கருணையேபொழியும்விநாயகன்றன்றிருத்தாள்போ

### வரமூர்த்தீசுவரர்வணக்கம்.

ஒருமூர்த்தியாயெங்கும்வியாபித்துப்பலவுயிர்களோங்கிற்கத்
திரிமூர்த்தியாய்மூன்றுதொழில்களையுமேநடத்தித்திவ்யஞானப்
பெருமூர்த்தியாயுமையோடெழுந்தருளிச்சிவஞானப்பேறுநல்க
வரமூர்த்தியாயிருந்தபெம்மான்றன்றிருவடியைவணங்குவோமால்.

### மரகதவல்லியார்வணக்கம்.

தாரகநற்படையாதிசூழ்சித்ரசேனனதுதுதியையேற்று
நாகதனில்விழாமலேகாத்துப்பல்வரங்களுறுமீந்து
பரகதியிலேயேறத்தானவன்பால்மகவர்கப்பரிவின்வந்த
மரகதவல்லித்தாயின்செஞ்சரணைநெஞ்சாரவழுத்துவோமே.

## சுப்பிரமணியர்வணக்கம்.

காலசக்கிரங்கடந்தவிற்பன்னஞானியர்கள்கருதிநிற்க
மூலவிக்கிரகமெனவவர்மனத்திலெந்நாளுமுனைந்திருந்து
சீலசித்தியையனைத்துமேயருளிமுத்தியினைச்செவ்வேவநல்கும்
பாலசுப்பிரமணியப்பெருமானினிருதாளைப்பணிந்துவாழ்வாம்.

## நால்வர்வணக்கம்.

மால்வராதியர்தமக்குமெட்டாதசிவபெருமான்மணிநற்றாளின்
பால்மனதையேவைத்துத்திருவருளினிற்றிளைத்துப்பாருய்தற்கே
சால்புடையதேவாரந்திருவாசகம்பாடித்தமிழ்வளர்த்த
நால்வர்களின்பொன்னடிகளெம்முடியினுளுநாட்டுவேமால்.

## நூல்.

# நைமிசாரணியச்சருக்கம்.



ஒருகாலத்தில் நான்முகக்கடவுளாகிய பிரமாவினிடத்தில் வியாசர், சுகர், சனகர், மார்க்கண்டேயர், காசிபர் முதலிய முனிவர்கள் சென்று நமஸ்கரித்து ஐயனே! நாங்கள் தவஞ்செய்தற்கு யோக்கியமான ஒரு பரிசுத்த தலம் கட்டளையிட்டருள வேண்டுமெனப் பிரார்த்தித்தனர். அப்பிரமாவானவர் சிறிது நேரம் எல்லாம்வல்ல சிவபெருமானைத் தியானஞ் செய்து ஒரு தருப்பைப் புல்லினை யெடுத்து நேமியாகச் சுருட்டிப் பூமியிலே யுருட்டி இது போய் நின்ற விடமே நீங்கள் நமது கண்ணுதற் பெருமானாகிய பரமசிவனை நோக்கித் தவஞ் செய்தற்கு யோக்கியமான இடமென்றனர். உடனே அம்முனிவர்கள் அந்த நேமியின்பின்னே தொடர்ந்து அது தங்கிய இடமே பரிசுத்தமான தலமென்று அங்குத் தங்கித் தவஞ் செய்யத் தொடங்கினர். பிரமாவிட்ட நேமி தங்கிய அவ்விடத்திற்கு நைமிசாரணியமெனப் பெயராயிற்று. அங்ஙனம் அம்முனிவர்கள் அந்த வனத்தில் பலநாள் தவஞ்செய்துகொண்டிருக்கையில், அவ்விடம் ஒருநாள் வியாசர் மாணாக்கராகிய சூதமாமுனிவர் விபூதியினைத் தேகமனைத்துஞ் சண்ணித்துக் கொண்டவராய், உருத்திராக்ஷாபரணம் பூண்டவராய், பஞ்சாட்சர நாவினராய், அரகர சிவசிவ மகாதேவ சம்போ என உச்சரித்துக்கொண்டு வந்தனர். அவரைக்கண்டு முனிவர்கள் உடனே எழுந்து

சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து சோடசோபசாரம் புரிந்து, அவர் சமீபத்திலுட்கார்ந்து, அஞ்சலிசெய்து கொண்டு, சொல்லு வாராயினர். எங்களை யாட்கொள்ளவந்த கிருபாநிதியாகிய சூத முனிவரே! பதினெண் புராணங்களையு முணர்ந்தவரே! சிவபெரு மானை மறவாத சிந்தையுடையவரே! முன்னொருகாலத்தில் தேவ ரீர்பால் பிரமாண்ட புராண முற்றுங் கேட்டிருக்கின்றோம். அச்சந் தர்ப்பத்தில் காசி, காஞ்சி, சிதம்பரம், திருவண்ணுமலை, காளத்தி, விருத்தாசலம், மதுரை, திருவாரூர், இராமேஸ்வரம், சம்புகேஸ் வர முதலிய திவ்விய தலங்களின் மகிமை யனைத்துந் தெரிந்தோம். அனேகமான புண்ணிய நதிகளின் தன்மையு முணர்ந்தோம். அவ் வத் தலங்களில் எழுந்தருளியிருக்கும் சர்வ மங்கள குண விக்கிரக ஞகிய சிவபெருமான் இயற்றியருளிய திருவிளையாடல்களையுமறிந் தோம். இவற்றையெல்லாந் தேவரீர் சொல்லிக்கொண்டு வருகை யில் வரமூர்த்தி ஈஸ்வரர் எழுந்தருளி யிருக்கும் அரியதுறை என்னு மொரு தலமானது பிரமாணியநதி தீரத்தில் இருப்பதாகக் குறிப்பித்தீர். அத்தகைய தலமெங்குள்ளது? அதன்மகிமை எத்த ன்மையது? அந்நதியாது? யாராலுண்டாயது? அத்தலத்தில் பூசித் தவர் யாவர்? இவற்றை யெல்லாம் எங்கட்கு இப்போது விஸ்தார மாகச் சொல்லவேண்டு மென்றனர். அதுகேட்ட சூதமுனிவர் ஆனந்தங் கொண்டு நைமிசாரணியரை நோக்கி ஐயன்மீர்! வர மூர்த்தி க்ஷேத்திரமகிமை கூர்மபுராணத்தில் கூறப்பட்டுள்ளது. அதன் மகிமை எனது ஆசிரியர் வியாசபகவானிடங் கேட்டுள் ளேன். அதனை இப்போது உங்கட்கு விஸ்தாரமாக விவகரிக்கின் றேன். இத்தலத்தின் அருமையினையும் பெருமையினையும் இன்று உங்கட்குச் சொல்லும்படி எனக்கேற்பட்ட புண்ணியமே புண்ணி யம். இத்தலத்தின் மகிமையினைக் கேட்டவுடன் அனேக கோடி. சென்மாந்தரங்களிற் செய்த பாவமனைத்தும் சூரியன்முன் பனி போ லாகுமென்பது சத்தியம். இத்தலத்தைக் கண்டவர்கள் முன்பு நரகப் பிராப்தமாகத்தக்க பாதகங்கள் எவ்வளவு செய்தி ருந்தாலும் அவ்வளவும் நீங்கப் பெறுவார்கள். இத்தலத்தில் வசித் திருந்து திருத்தொண்டு செய்பவர்கள் புவன ராஜாதிபதிகளெல் லாம் தமக்குத் தொண்டுசெய்ய வீற்றிருப்பார்கள். வரமூர்த்தி நாதரென ஒருமுறை ஜெபித்தவர்கள் சகல பாக்கியங்களையும் பெறுவார்கள். இத்தலத்தில் செய்கின்ற செபதப யாகாதி தர்மங்

கள் ஒன்று அனந்தமாகும். இத்தலத்தை யடைந்து அரணிநதியில் ஸ்நானஞ் செய்வோர், ஆலயந்தரிசிப்போர், தியானிப்போர், வசிப்போர், அடையும்பலன் என்னாற்சொல்லப்படுமோ. விசேஷதினங்களில் அரணிநதியில் மூழ்குவோர் பிறவிப் பெருங்காட்டைப் பஞ்சுபோல எரிப்பர். விசேஷ தினங்களில் இதில் வந்து மூழ்குவோர் அவர்கள் வேண்டிய இஷ்ட சித்திகளையெல்லா மடைவர். வரமூர்த்திநாதனை உதயகாலத்திலே மெய்யன்போடு தரிசிப்போர் சமஸ்த தருமங்களையு மடைவர். உச்சிக்காலத்திலே தரிசிப்போர் சமஸ்த நிதிகளு நிறையப்பெறுவர். சாயங்காலத்திலே தரிசிப்போர் எல்லாவின்பங்களையுமடைவர். அர்த்தசாமத்திலே தரிசிப்போர் பிறந்திறவாப் பெருவாழ்வை யடைவர். இத்தலத்துச் சிவாலயத்தில் திருவலகுப்பணி திருமெழுகுப்பணி திருநந்தவனப்பணி திருமாலைப்பணி தூபப்பணி தீபப்பணி முதலியனசெய்வோர், சொர்ணமுதலியவற்றாற்செய்தகுடங்கள் கலசங்கள் தூபக்கால் தீபக்கால்மணி முதலிய பூஜாபாத்திரங்கள் கொடுப்போர், நித்திய பூஜைக்கு வேண்டிய சமஸ்த திரவியங்களும் சிறிதும் பழுதில்லாமல் நன்காராய்ந்து காலந்தோறுங் கொடுத்து விதிவழுவாமற் பூசை செய்விப்போர், திருவிழாக்கள் விதிப்படி சவிஸ்தாரமாகநடத்துவோர், திருக்கோயிற் பழுது பார்த்தல் முதலிய திருப்பணிகள் செய்தளிப்போர், உத்தமமான பசுக்கள் வளர்த்து நாடோறும் பால்கொடுப்போர்முதலிய திருத்தொண்டர்களடையும் பலனை அளவிட்டுச் சொல்ல யார்வல்லவர்கள்? இத்தகைய திவ்விய தலத்தின் மகிமையினைச்சொல்ல ஆரம்பிக்கின்றேன். நீங்களனைவரும் சிவத்தியானத்துடன் மனவொருமையுடனிருந்து கேட்பீர்களாக எனச் சொல்லத்தொடங்கினர்.

நைமிசாரணியச்சருக்கம்

முற்றுப்பெற்றது.

---

## உரோமசர்பூசித்தசருக்கம்.

சைவாசார நூல்வியர்களாகிய நைமிசாரணியவாசிகளே! தாமரைமலரில் எழுந்தருளி யிருக்கும் நான்முகக்கடவுளாகிய பிரமாவானவர் ஒருசமயத்தில் ஒரு அருமையான யாகஞ் செய்ய

வேண்டுமெனக் கருதிச் சிவத்தியானத்துடன் மத்திய வுலகத்தினுக்கு வந்து சேர்ந்து பரதவருஷத்தில் யாகத்தினை யாரம்பிக்கத் தீர்மானித்துக் * காளகூடாசன க்ஷேத்திரத்தினை யடைந்து யாகத்திற்குவேண்டிய சிவாக்கினியை யுண்டாக்கும் பொருட்டுத் தீக்கடைக்கோலாகிய அரணியைக் கொண்டு கடைந்தனர். அதினின்றும் ஆகவனீயம், தட்சணாக்கினியம், காருகபத்தியம் என மூன்று தீயுண்டாயின. மறுபடியுங் கடைந்தனர். அதினின்றுங் கங்கை யுண்டாகிப் பெருகி யோடியது. அதற்கு அரணிநதியெனப் பெயருண்டாயது. அப்போது அவ்விடத்திற்கு உரோமசமுனிவர் முதலாயினோர் வந்தனர். அவர்களுடன் பிரமாவானவர் சிவயாகத்தினைநிறைவேற்றியபின், உரோமசமுனிவரை நோக்கிச் சொல்லுவாராயினார். ஏ முனிவரே! நீர் இன்னுஞ் சிலகாலம் இத்தலத்திற்குச் சமீபத்தில் தவஞ்செய்துகொண்டிருக்கக்கடவீர். அதற்குரிய இடமானது எதுவெனக் கேட்பீராகில்? கிழக்குச்சமுத்திரத்திற்கு ஒருயோசனை தூரத்தில் மேற்கிலும், திருக்காளத்திக்கு தெற்கே ஐந்து யோசனை தூரத்திலும், திருவாலங்காட்டிற்குக் கிழக்கே இரண்டுயோசனை தூரத்திலும், அரணிநதிக்கும் குசஸ்தலைக்கு மத்தியிலுள்ள பஞ்சேஷ்டிக்கு மேற்கே இரண்டு குரோசத்திலும், காளகூடாசன க்ஷேத்திரத்திற்குக்கிழக்கே ஒருயோசனை தூரத்திலும், ஆதிபுரியாகிய திருவொற்றியூரினுக்கு மேற்றிசையிற் சிறிது தூரத்திலும் உள்ளது. அரணிநதிதீரத்தினை வாய்ந்தது. வன்னி, எலுமிச்சை, நாரத்தை, கோங்கு, மந்தாரை, விலங்கை, நொச்சி, அகில், சந்து, மகிழ், மாதுளை, அசோகு, பாதிரி, இலந்தை, பலாசு, நுணா, நறவம், புன்னை, விளா, மருது, கொன்றை, நெல்லி, குரா, செருந்தி, ஆவிரை, கிளுவை, குருந்து, வில்வம், நாவல் முதலிய கோட்டுப்பூவினை வாய்ந்த விருட்சசாலங்களால் நிறைந்தது. இவைகட்கு நாயகமாக அரசமர மொன்றுளது. அதனீழல் தவம் புரிவதற்கு யோக்கியமான இடமென வகுத்தருளினர்.

உரோமசமுனிவர் கேட்டு ஆனந்தமுற்று நான்முகக்கடவுள் கட்டளையின்படியே, அவ்விருட்சத்தினடியில் தருப்பையாசனமிட்டு வைகாசிமாதம் வேதமூல மந்திரமாகிய பஞ்சாட்சரத்தினைத் தியானஞ்செய்து கொண்டு தவமுஞற்றினர். மழைக்காலத்தில்

* இத்தலம் இக்காலத்தில் சுருட்டப்பல்லி என வழங்குகின்றது.

அதிகக் குளிருண்டாகுமிடத்தி லிருந்தனர். பிராணாயாமஞ் செய்துகொண்டு வருடத்திற்கொருதரம் மூச்சுவிடுதலும் ஆகாரங் கொள்வதுமாக விரதம் பூண்டனர். இங்ஙனம் நூறுவருடமிருந்தும் சிவபெருமான் பிரத்தியட்சமாகவில்லை. அதன்மேல் அதிகமான வருத்த முடையவராய் வருடத்திற்கொருதரம் விடும் மூச்சினையும் உணவினையும் நிறுத்திவிட்டு அகோரமான தவங் கூடினர். அப்போது அவர் தவத்தால் விளைந்த தபாக்கினியானது அவரினின்றும் வெளிப்பட்டுக் கபாலத்தைக் கீறிக்கொண்டு பிரமலோக பரியந்தம் எழும்பி யாவரையுங் கொளுத்த ஆரம்பித்தது. தேவர்கள் பிரமாவினிடத்திற் சென்று முறையமிட்டார்கள். பிரமாவானவர் கைலாயமடைந்து சந்திரசேகரனாகிய சிவபெருமான் திருவடியில் வீழ்ந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து உண்மையினை விஞ்ஞாபனஞ் செய்தனர். உடனே கருணாமூர்த்தியாகிய கண்ணுதற் பெருமான் திருவருள் புரிந்து உரோமசமுனிவர் முன்னிலையில், மான்மழு சதுர்புஜ காளகண்ட திரிநேத்திர சடாதாரியாய், சந்திரசூடராய், கங்கை முடியராய், பரம கருணாநிதியாகிய பார்வதிசமேதராய், புண்ணிய சொரூபமாகிய இடபவாகனரூடராய் எழுந்தருளிவந்து காட்சிதந்தருளினர். உரோமசமுனிவர்பெருமானைத் தரிசித்தவுடன் எழுந்து பலதரம் பூமியில் விழுந்து எழுந்து அஞ்சலி செய்துகொண்டு ஆனந்த மேலிட்டவராய்:—

சங்கரா போற்றி போற்றி சதாசிவா போற்றி போற்றி
பொங்கரா வணிந்தாய் போற்றி புண்ணிய முதலே போற்றி
ஐங்கரன் றன்னை யீன்ற வைம்முகத் தேவே போற்றி
இங்கெனை யாள வந்த வீசனே போற்றி போற்றி.

தாணுவே போற்றி போற்றி தற்பரா போற்றி போற்றி
நாணுற மலையை வில்லாய் நாட்டிய நம்பா போற்றி
ஆணுமாய்ப் பெண்ணு மாகி யலியுமா யானாய் போற்றி
காணுமா றென்றன் முன்னே காட்சியைக் கொடுத்தாய் போற்றி.

பாலநேத் திரனே போற்றி பார்வதி மணாளா போற்றி
ஆலத்தை யமுதாக் கொண்ட வற்புத வானே போற்றி
சீலத்தா லடியே னானுஞ் செய்தவந் தனக்கி ரங்கிச்
சாலவே வந்து காட்சி தந்தருள் கோலம் போற்றி.

எனப் பலதோத்திரங்கள் செய்து நிற்கத் திரிநேத்திரதாரியாகிய சிவபெருமான் முனிவரைநோக்கி, ஏ உரோமசமுனிவனே! உனது

அரிய தவத்தினுக்காகச் சந்தோஷமடைந்தோம். உனக்கு வேண்டிய வரங்களைக் கேட்பாயாக. எந்தப் பதவி கேட்கினும் சொந்தமாகக் கொடுக்கின்றோம் என்றனர். உரோமசமுனிவர் சுவாமியை நோக்கி அடியேனை யாட்கொள்ள எழுந்தருளிவந்த கிருபாசமுத்திரமே! எனக்கு இந்திரபோகமும் வேண்டியதில்லை. பிரமன்பதவியும் வேண்டியதில்லை. விண்டுலகமும் வேண்டியதில்லை. சிவசாம்பிராச்சியப் பேறொன்றே யளித்தருளவேண்டும். அன்றியும் சந்திரசூரியர் உள்ளவரையில் இத்தலத்தில் வரமூர்த்தியீஸ்வாராக எழுந்தருளி யிருந்து இவ்விடத்தில் வந்து பணியும் அடியார் யாவருக்குங் கிருபை பாலித்தருள வேண்டும். இவ்வரசமரம் என்றுந் தழைத்திருக்க வேண்டும். இவ்வரணிநதியானது கங்கைக்குச் சமத்துவமாக வேண்டும். இதில் ஸ்நானஞ் செய்வாரனைவரும் மோட்சமடையவேண்டும். இந்நதியின் ஜலத்தைக்கொண்டு தேவரீருக்கு அபிஷேகம் செய்துவைப்போர் இம்மையில் நன்மனைவி புத்திர பௌத்திரருடனே அதிக செல்வமுற்று வாழ்ந்து, மறுமையில் சிவசாம்பிராச்சியமடைதல் வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். அங்ஙனமே யாகுக வெனத் திருவாய்மலர்ந்தருளிப் பார்வதி சமேதர் அந்தரத்தானமாயினர். பின்பு உரோமசமுனிவர் பிரமாவை நோக்கி ஐய! இந்தத்தலம் இவ்வளவு மகிமையினை வாய்ந்ததற்குக் காரணம் யாது என்று கேட்க, அவர் அன்பனே! நம்மையெல்லாம் ஆட்கொள்ள எழுந்தருளியிருக்கும் நமது பெருமான் ஐந்து தலங்களை ஐந்து திருமுகங்களாகக் கொண்டு விளங்குகின்றார். அப்பெருமானுடைய ஈசானியமுகம் சரகூடபுரம், தத்புருஷமுகம் மகாகடகபுரம், வாமதேவமுகம் ஆரணிபுரம், சத்யோசாதமுகம் வரமூர்த்திபுரம், அகோரமுகம் * சிந்தாமணித்தலமாம். இவற்றுள் இவ்வரமூர்த்திக்ஷேத்திரம் மிக மகிமையுடன் கூடியது. கலிகாலத்தில் அவரவர்கட்கு வேண்டியவரங்களைத் தவறாமலளிப்பது. ஒருபுண்ணியம் பலபுண்ணியங்களாக விளைவது என்று கூறிப் பிரமாவிடைபெற்றுச் சென்றனர். இத்தலத்திலேயே உரோமசமுனிவர் சிவபூசைசெய்துகொண்டு வாழ்ந்து வந்தனர்.

உரோமசர்பூசித்தசருக்கம்

முற்றுப்பெற்றது.

---

* இச்சிந்தாமணித்தலம் திருவொற்றியூரினுக்கு வடக்கேயுள்ளது. இத்தலபுராணம் இந்நூலாசிரியராலியற்றி யச்சிடப்பட்டுள்ளது.

# இந்திரன்பிரமகத்திசருக்கம்.



தத்துவஞான தவசிகளாகிய நைமிசாரணிய வாசிகளே! தேவர்கட்குப் பூர்வகாலத்தில் மிகத் துன்பஞ்செய்துகொண்டிருந்த விருத்திராசுரனென்னும் அசுரனுக்கும் தேவேந்திரனுக்கும் ஒருகாலத்தில் மகாயுத்தம் நடந்தேறியது. அப்போது இந்திரன் யுத்தகளத்தில் நின்று அசுரர்களை எதிர்த்து இடியைப்போலக்கர்ச்சித்து அட்டகாசஞ் செய்து பலர் மண்டைகளை யுடைத்துக் கால்களை முறித்துக் கரங்களை யொடித்து வாய்களைப் பிளந்தனன். அசுரன் கண்டு மிகுந்த கோபாவேசத்தனாகி இந்திரன்மீது சந்திராஸ்திரத்தைப் பிரயோகித்தான். இந்திரன் சூரியாஸ்திரத்தை விடுத்து அதனைத்தடுத்துக்கொண்டு வருணாஸ்திரத்தை விட்டான். அசுரன் அக்கினியாஸ்திரம் விடுத்து அதனைத் தடுத்துக்கொண்டு கருடாஸ்திரம் விட்டான். இந்திரன் நாரணாஸ்திரம் விடுத்து அதனைத் தடுத்துக்கொண்டு வாயுவாஸ்திரம் விட்டான். அசுரன் சர்பாஸ்திரம் விடுத்து அதனைத் தடுத்துக்கொண்டு மோகனாஸ்திரம் விட்டான். இந்திரன் ஞானாஸ்திரம் விடுத்து அதனைத் தடுத்துக்கொண்டு உடனே வச்சிராயுதத்தை வீசி அசுரனைக்கொன்று அவனுடலைச் சின்னாபின்னமாக்கித் தூக்கியெறிந்தனன். அப்போது அவ்வசுரன் எலும்புகள் ஏமகூடத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த அகஸ்தியமுனிவர் சடாமுடியின்மேல் விழுந்தது. அம்முனிவர்அது கண்டு என்சிரசில் எலும்பு விழும்படி செய்தவன் யாரோ அவன் இராட்சசனாகப்போகக் கடவது என்று சபித்து வேறிடம் போய்விட்டனர். உடனே இந்திரன் இராட்சசனாயினான்.

இவ்வுண்மையினையறிந்த தேவகுருவாகிய பிரகஸ்பதிபகவான் அகத்தியமுனிவரிடஞ் சென்று வணங்கி ஐயனே! நம்மவர்கட்கெல்லாம் அதிக துன்பத்தினை விளைவித்துக்கொண்டிருந்த விருத்திராசுரனை இந்திரன் வெகுபிரயாசையுடன் கொன்று அவனைத் தூக்கியெறிந்தனன். அவன் எலும்பு தேவரீர் சிரமேல் விழவே தாங்கள் சபித்துவிட்டீர். இது காரியம் இந்திரன் தெரிந்து செய்தானில்லை. மன்னித்தருளவேண்டும் என்றனர். அகஸ்தியர் பிரகஸ்பதியை நோக்கி ஐய! என் சாபம் வீணேபோகாது, நூறுவருடமளவும் அவன் அந்தச் சாபத்தை யனுபவித்தபின்பு நமது சிவ

பெரு
அது
தனை
நடத்
இந்தி
கோ
கறுத்
கானு

ன்று நின்றுகொண்டு பயங்கரரூபத்துடன் பல கொடுமைகளைச் செய்து சஞ்சரித்து வந்தான். ஒருநாள் அவன் ஒருவனத்திலிருந்துகொண்டிருந்த கௌதமமுனிவரை யடைந்து நெருங்கி அவரை யிம்சிக்க முயலுகையில், அவர் அவனைக்கண்டுகோபித்து எறிக்க ஆரம்பித்தபோது அவ்விடம் விட்டுத் தப்பித்துக்கொண்டு யமுனா தீரம், தண்டகாரணிய முதலிய வனங்களில் திரிந்து, ஒருநாள் வசிஷ்டமுனிவரைச் சந்தித்து ஹுங்காரஞ் செய்து அவருடைய பத்தினியாராகிய அருந்ததியைத் தூக்கிக்கொண்டு விசையாக நடந்தனன். முனிவர் கண்டு தமது கமண்டலநீரை யள்ளி யவன்மேல் தெளித்தார். அவன் அப்போது சிறிது அறிவு பிறந்து முனிவரிடம் வந்து அருந்ததியை விட்டு விட்டுச் சிறிது நேரத்திற்கெல்லாம் பழையபடியே ஆடம்பரஞ் செய்தனன். முனிவர் அவன்மீது கருணை கூர்ந்து கிருபைபாலித்து அவன் உக்கிரத்தினை யடக்கி அவனது பூர்வ சரித்திரத்தினை யெடுத்துச் சொல்லினர். இராட்சசன் முனிவரை நோக்கி ஐயனே! எனக்கு அறிவு சிறிது விளங்குகின்றது.ஆயினும் கொடுமை செய்யவே மனந் தூண்டுகிறது.இதற்குத் தீர்வு எப்போது உண்டாகுமென்றனன்.வசிட்டர் இராட்சசவடிவ மமைந்த இந்திரனே! பொருளைப் போட்ட இடத்திலேயே தேடவேண்டும். சபித்த இடததிலேயே அனுக்கிரகமடையவேண்டும். இப்போது அகத்தியமுனிவர் திருவாலங்காட்டில் தவஞ்செய்துகொண்டிருக்கிறார். அவரிடஞ் சென்று சரணாகதியென்றடைந்தால் உனக்கு விமோசன முண்டாகும், போய்வருவாய் என்று வசிஷ்டர் கட்டளையிட்டனர். அவர்கட்டளையின்படி அசுரனாகிய இந்திரன் குறுமுனியை யடைந்து சாஷ்டாங்கமாகப் பணிந்து ஐயனே! கடலை உழுந்தளவாகக் கரத்திலடக்கிய பெருமையனே! விந்திய மலையின் இறுமாப்பை யடக்கிய வீரனே! அறியாமையால்

அடியேன் செய்த குற்றத்தினை மன்னித்தருளவேண்டும் என்று கேட்டுக்கொண்டனன். முனிவர் அவனை நோக்கித் தேவேந்திரனே! அஞ்ஞானத்தால் ஆலோசியாது நீ செய்த குற்றத்திற்கு இதுவரையில் நீயடைந்த பிரயாசை போதும். இனி நீ அரணிநதி தீரத்தில் வரமூர்த்தி க்ஷேத்திரமடைந்து ஒருபட்சம் பட்சமாய்ச் சிவபூசை செய்குவையேல் உனது சாப நீங்கப்பெற்றுப் பழையபடியே உனது உலகம் செல்லக்கடவாய். அத்தலத்தில் முகுந்தன், சித்திரசேனன், முதலியவர்கள் பூசித்துப் பேறுபெற்றனரென்றனர். இந்திரன் அகத்தியமுனிவரை நோக்கிக் கும்பமுனியே! முகுந்தன் என்பவன் எங்ஙனம் அவ்வரமூர்த்திதலத்தில் வரம்பெற்றுய்ந்தனன். திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்ன அம்முனிபுங்கவர் சொல்லத்தொடங்கினர்.

இந்திரன்பிரமகத்திசருக்கம்

முற்றுப்பெற்றது.

---

## முகுந்தன்பூசித்தசருக்கம்.

பொன்னுலகத்துத் தேவேந்திரனே! சைவாசாரதுல்லியராகிய அத்திரிமுனிவரும் அவரது தருமபத்தினியாகிய அனுசூயையும் இல்லறநடத்தி வருகையில், அவருக்குத் துருவாசர், தத்தாத்திரியேயர், பிரமகீர்த்தி, சந்திரன், முகுந்தனென ஐந்து புத்திரர்கள் பிறந்தனர். இவர்கள் யாவரும் விவாகஞ் செய்துகொள்ளாது, துருவாசர் கோகர்ணம் சென்று தவஞ்செய்துகொண்டிருந்தனர். தத்தாத்திரேயர் நாராயணபுரி சென்று தவம் புரிந்தனர். பிரமகீர்த்தி மாகாளஞ்சென்று தவங் கூடினர். சந்திரன் ஆகாயமார்க்கஞ் சென்று சந்திரமண்டல மடைந்தனன். முகுந்தன் அதிக விரக்தியடைந்து திருக்காளத்தி, சிதம்பரம், அருணசலம், மதுரை, திருவாரூர், விருத்தாசலம், இராமேஸ்வரம் முதலிய தலங்களைத் தரிசித்துக்கொண்டு எங்குந் திருப்தி யடையாது, உரோமசமுனிவர் தவஞ்செய்யும் அரணிநதி தீரத்திலுள்ள வரமூர்த்தி க்ஷேத்திரமடைந்து உரோமசமுனிவரைவணங்கி அத்தல மகாத்மியங்களைக் கேட்டு மனத்திருப்தி யடைந்து நூறு வருடகாலம் பிரதி

னம் ஆயிரம் வில்வ இதழ்களைக் கொண்டு சிவபூசை செய்துகொண்டு வருகையில், காசிக்குச் சென்று கங்கையில் ஸ்நானஞ்செய்ய ஆசைகொண்டனர். அது நோக்கி யொருநாள் காலையில் பிரயாணப்பட எத்தனிக்கையில், வரமூர்த்திநாதர் ஒரு பிரமசாரி பிராமணர் வடிவங்கொண்டு எதிரிலே வந்து முகுந்தனே! கங்கையினைச் சடையிலேதரித்த கங்காதரமூர்த்தி இத்தலத்திலேயே யிருக்கின்றனர். புண்ணியரூபமான அரணிதீர்த்தமு மிங்குள்ளது. விஷ்ணுமூர்த்தியானவர் ஒரு அரசவடிவமாகி இத்தலத்தில் தவஞ்செய்துகொண்டிருக்கின்றனர். இதனை விட்டு வேறிடம் செல்லுவானேன். உன்னிடத்திலிருக்கிற தண்டு கமண்டலத்தினை என்னிடம் கொடு என்றனர். உடனே கொடுத்துவிட்டு முகுந்தன் அரணிநதியில் மூழ்கி அகமருஷணமந்திரஞ் செபித்துக் கரையேறினவுடன் எதிரில் காலபைரவர் தண்டுகமண்டலத்துடனே நின்றனர். அப்போது அப்பைரவருக்குப்பின்னால் அரணிநதியிலிருந்து குறுக்கே வெண்மைநிறத்துடன் காசிக் கங்கைநதி யூடுருவிப் பாய்ந்து பிரவாகித்தது. முகுந்தன் ஆச்சரியமுற்றுக் கொண்டிருக்கையில், உரோமச முனிவர் முதலியோர் யாவரும் வியந்து கொண்டாடி முகுந்தன் பொருட்டு இத்தலத்திலேயே கங்கை வந்ததென்று சந்தோஷித்து இது அரியதுறை! அரியதுறை!! எனக் கூறி அதில் யாவரும் ஸ்நானஞ் செய்து இது பிரமகத்தி, ஸ்திரீயத்தி, சிசுவத்தி, குருவத்தி முதலிய சகல பாவங்களையும் போக்கடிக்கத் தக்கதென்று ஆனந்தமுற்று ஆடிப் பாடினர். காலபைரவமூர்த்தி திருவுருவத்தினை ஆலயத்தில் பிரதிஷ்டித்தனர்.

## சிவபூசை.

முகுந்தன் காசித்தலத்தினையும் அத்தலத்துக் கங்கையினையு மறந்து, வரமூர்த்திநாதரைச் சிவாகமவிதிப்படி சவிஸ்தாரமாகப் பூஜித்தற்கு அன்பு மிக்குடையராய் வேண்டிய பூஜோப காரணங்களெல்லாம் நிறையச் செய்து, விநாயக பூசை முடித்துப் பிரார்த்தித்துக்கொண்டு, சூரியாதி பரிவாரப் பூசனை முடித்து, வரமூர்த்திநாதர்சன்னிதியிலே வடக்குமுகமாகவிருந்து பிராணாயாம சகளீகரணஞ் செய்து, பாத்தியாசமனார்க்கியங்க ளமைத்துப், பூதசுத்திகள்செய்து அந்தரியாக முடித்துப் புறத்தேயும் பூஜித்தற்கு வேண்டி அநுஞை பெற்று, விதிப்படி ஆசனங்கற்பித்துச் சதாசிவ

மூர்த்தி நிவேதனுதி மூர்த்திமான் ஆவாகனுதி செய்து, தைலம், மாப்பொடி,மஞ்சட்பொடி,நெல்லிப்பொடி, பஞ்சகவ்வியம், ரசபஞ் சாமிர்தம்,பலபஞ்சாமிர்தம், பால், தயிர், நெய்,இளவெந்நீர்,தேன், சருக்கரை, கருப்பஞ்சாறு,எலுமிச்சை,நாரத்தை,மாதுளை முதலிய பலவகைப் பழச்சாறு இளநீர் சந்தனக்குழம்பு சகஸ்திர தாராதி வில்வோதக சுகந்த புஷ்போதக ரத்தினோதகாதி அபிஷேகங்கள் இந்த வரிசைப்படியே செய்து, உடனே விபூதி சந்தனம் அறுகு அட்சதை வில்வம் அணிந்து வஸ்திராபரண புஷ்ப மாலாதி திவ் வியாலங்காரஞ் செய்து தூப தீப நிவேதனவர்க்க மகாதீபாதிசோ டசோப சாரங்களுஞ் செய்து சகஸ்திரநாம வில்வார்ச்சன செப நிவேதனுதி செய்து பலமுறை நமஸ்கரித் தெழுந்து அஞ்சலியஸ் தராய் நின்று வரமூர்த்திநாதரின் திருக்கோலப் பொலிவைக் கண் கொள்ளாமற் றிரும்பாவண்ணந் தரிசித்து நின்று வாய்கொள்ளா மல் அருமை பெருமை பாராட்டித் தோத்திரம் புரிந்து மேலும் பலமுறை நமஸ்கரித்துத் திருவருள் வெள்ளத்தில் அமிழ்ந்து பரவசனுய் நின்றார். இங்ஙனம் பலவருடம் இத்திவ்வியதலத்திலே பூசைசெய்துகொண்டிருந்து சிவசாம்பிராச்சிய மடைந்தனர். என்று அகஸ்தியமுனிவர் சொல்ல இந்திரன் கேட்டு ஆச்சரியமுற் றுக் கும்பமுனிவரை நோக்கி எனையாட்கொள்ள வந்த பரம குரு வாகிய முனிவரே! முகுந்தன் பெருமையினைக் கேட்டேன். சித்தி ரசேனன் மகிமையைக் கேட்க ஆவலுடையவனு யிருக்கின்றேன் என்னலும் குறுமுனிவர் சிறிது நேரஞ் சிவசிந்தனை செய்து சொல்லத் தொடங்கினர்.

முகுந்தன்பூசித்தசருக்கம்

முற்றுப்பெற்றது.

---

## சித்திரசேனன்பூசித்தசருக்கம்.

தேவர்களதிபதியாகிய தேவேந்திரனே! வரமூர்த்திக்ஷேத் திரத்தின் கிழக்கே ஒரு யோசனை தூரத்தில் தியாகசாகரமென ஒரு பட்டணமுண்டு. அது அத்தி அசோகு அனிச்சை ஆச்சா ஆத்தி இத்தி இலந்தை இலவம் ஈந்து எலுமிச்சை ஓமை முதலிய விருட்சசாலங்களால் சூழப்பெற்றது. இரமணியமான புஷ்பங்க

ணிறைந்த தடாகங்கள் நிறைந்தது. சோலைகளாற் சூழ்ந்தது. நால் வகையினரான உத்தமசாதியர்களின் வீதிகள் பல்லாயிரமுள்ளது. நால்வகைச் சேனைகளெருங்கியது. அரணிநதிதீரத்திலேயுள்ளது. இத்தகைய நகரில் சந்திர வமிசத்தில் சித்திரசேன னென்பவனொருவன், தருமசேனன் புத்திரியாகிய சுசீலை யென்னுங் கற்புடைய மனைவியாருடனே அரசாட்சி செய்து வந்தனன். அவனுக்கு ஐந்துபிள்ளைகள் பிறந்தனர். அவர்கள் வெகுநாள் வளர்ந்து ஒரேநாளி லிறந்துவிட்டனர். மறுபடியும் நான்குபேர்பிறந்தனர். அவர்களும் நெடுநாள் வளர்ந்து ஒருதினத்திலேயே இறந்துவிட்டனர். அதனால் அரசன் அதிக வியாகூல மடைந்திருந்தனன். அவன் மனைவி மிக வருத்தமுற்று அன்ன வாகார மின்றி நித்திரை நீங்கிப் பூஷணாதிகளை வெறுத்து மிக மெலிந்து தேகம் வெளுத்துப் போயினள். அரசன் கண்டு திகிலடைந்து இராசாங்கத்தினை வெறுத்து மந்திரியினிடத்துத் தனது இராச்சியத்தினை ஒப்புவித்து யாத்திரைசெய்யக் கருதிச்சென்று உரோமசரிடம்போய் நின்று நமஸ்காரம் செய்தனன். அம்முனிவர் பார்த்து மகாராஜனே! உனக்கு நேர்ந்த துன்பமென்ன? நினது பாட்டனார்முதல் தியாகசமுத்திரத்தினை யிடையூறின்றி யாண்டு வந்தீர்களே! நினது மனைவியும் இங்ஙனம் மெலிந்துவிட்டனளே என்ன ஆபத்து விளைந்தது என்றனர். அரசன் நடந்த விருத்தாந்த மனைத்தும் சொல்லி முனிவரனே! இத்தகைய பெரும்பாதகம் எங்கட்கு விளைந்ததற்குக் காரண மென்ன? மனமார நாங்கள் யாதொரு தீங்குஞ் செய்ததில்லையே என்றனன். உரோமசமுனிவர் சற்றுநேரம் சகலலோக சர்வேசனாகிய சதாசிவமூர்த்தியைத் தியானஞ்செய்து சொல்லுவாராயினர். இராஜாதிராஜ! பூர்வத்தில் சூரியவம்சத்தில் கல்மாஷபாதனென்னும் பெயருடைய அரசனாக விருந்தனை. ஒருநாள் நீ வேட்டையாடச் செல்லுகையில் வசிஷ்டமுனிவர் புத்திரனைக் கண்டு குதிரையைவிட்டிறங்காமலும் வந்தன மாதிய செய்யாமலும் அதி இறுமாப்புடனே நெருங்கினாய். அவர் உன்னைக் கண்டு இராட்சசனாகப் போகக்கடவது என்று சபித்தனர். அங்ஙனமே நீ யவ்வுருவடைந்து மலை காடு நதி முதலியவற்றில் நெடுநாள் சஞ்சரித்துத் திரிந்து ஒருநாள் சரயுநதி தீரமடைந்து அவ்விடம் வாழ்ந்த சத்திமுனிவரைக் கொன்று அவர் பத்தினியின் கர்ப்பத்தினை நகத்தாற் கீறினாய். அவள் வயிற்றினின்றும் பராசர் வெளிவந்து ஓடினார்.

அவரையுந் தொடர்ந்தாய். அது கண்டு பராசர் பாட்டனாராகிய வசிஷ்டர் உன்னைப்பார்த்து மனமிரங்கி யுன்சாபத்தை மாற்றினார். நீ பழைய சொரூபமடைந்தாய். பின்னர் அம்முனிவர் கிருபைய டைந்து உன் இராச்சியமடைந்தாய். இப்போது சித்திரசேனனு கப் பிறந்தாய். பூர்வத்தில் சத்தியாவதியாயிருந்தவள் இப்போது சுசீலையாக உன்மனைவி யாயினள் என்றனர். அரசன்கேட்டுத் திடுக் கிட்டு முனிவரை நோக்கி ஐயனே! இப்பெரும் பாவத்திற்குப் பிராயச்சித்தம் தேவரீரே சொல்லியருளவேண்டும். இலையேல் இத்தேசத்தாசரனைவரும் எனை நோக்கிச் சிரிப்பர் என்று தன் மனைவியுடன் சாஷ்டாங்கமாக விழுந்து எழுந்தனன். முனிவர் அரசனை நோக்கிச் சித்திரசேனனே! அஞ்சற்க, இப்பெரும் பாத கம் சிவலிங்கப்பூசையா லன்றிப் போகாது. இப்பூசைக்கு முக்கிய சாதனங்களாக விருப்பது விபூதி ருத்திராட்ச பஞ்சாட்சரமே. இவற்றின் மகிமையினைக் கேட்பாயாக.

## விபூதி மகிமை.

விபூதியானது பவரோக நிர்மூல அருமருந்தெனப்படும். இது வைதிக விபூதி யென்றும் சைவ விபூதி யென்றும் இரண்டு விதமாம். வைதிக விபூதியானது வேதத்திற் சொன்னபடி யாகத் தில் விளைவிப்பது. இது புத்தி யொன்றினையே யளிக்கும். சைவ விபூதி ஆகமத்திற் சொன்னபடி சிவாக்கினியால் விளைவிப்பது. இது புத்தியினையு முத்தியினையு மளிக்கும். இச்சைவ நீறு கற்பம் அனுகற்பம் உபகற்பம் அகற்பமென நால்வகைப்படும். கற்பமுடிக் கும் விதமாவது. கன்றீனுததாய் கொடுமையில்லாததாய்க் கிழமல் லாததாய் சினையில்லாததாய் வால் செவி குறைவில்லாததாய் மலடி ல்லாததாய் மலமுண்ணுததாய் கன்றீன்று பதினைந்து நாளுக்குட்ப டாததாய், கன்றிருப்பதாய் குருடாய்ச் செவிடாயுள்ள தீங்குகளில் லாத பசுவினைத் தேடிச் சம்பாதித்து, பங்குனிமாதத்து நெல்லின் வைக்கோலை மேயச்செய்து காலையிலெழுந்து அனுட்டான முடித் துக்கொண்டு தொழுவத்திற் சென்று பசுவின் மீது சாவித்திரி யென்னு மந்திரத்தால் சந்தனமு மலர்களுஞ் சாத்தித் தூபதீபங் கொடுத்து அன்னம் பாகில நிவேதித்துப் பசுவைப் பணிந்து அருச்சனை புரிந்து மந்திர நூறு செபித்துப் பருவம் அமாவாசை அஷ்டமி சதுர்த்தசி தினம் இன்னகாலங்களில் அப்பசுவின் கோம

யத்தைத் தாமரையிலையிலாவது வாழையிலையிலாவது பலாசிலையிலாவது தாங்கி யோனியிற்படாது சத்தியோசாத மந்திரத்தாலேற்று வழும்பினைத் தள்ளிக் கவ்வியம் பெய்து கோரமந்திரத்தாற் பிசைந்து புருடமந்திரத்தா லுருட்டி ஓமத்திற் பதடியோடிட்டு அகோர மந்திரத்தால் விளைவித்துப் பாகமுற்ற போது ஈசானமந்திரத்தாலெடுத்து நூதன வஸ்திரத்தில் வடித்துச் சங்கு பொன் வெள்ளி தாமிரம் மண் சுரை பித்தளைப் பாத்திரங்களில் வைத்துப் பஞ்சாட்சர தியானஞ் செய்து பஞ்சபிரம மந்திரத்தால் சடங்கஞ் செய்து வியோப வியாபினி யென்னு மந்திரத்தால் ஆகமவிதிப்படி செபித்துச் சண்பகம் கேதகை பலாசம் புன்னாகம் சிறிய சண்பகம் தாமரை துளசி பத்திரி கருப்பூரம் வெட்டிவேர் விலாமிச்சை மல்லிகை தக்கோலம் நாயுருவி தருப்பையினுனி யிவைகளின் வாசனையையேற்றிச் சத்தியோசாதமும் ஈசானமுஞ் செபித்துக் காயத்திரி விளம்பிப் பூமியில் வைத்துக் குட்டிக்கொண்டு வாய்பொத்தி அவகுண்டனம் பண்ணி அத்திரந் தெரிந்து,தேனுமுத்திரை முதலாகச் செய்து சிவமந்திர முச்சரித்து விபூதியினை யெடுத்தல் வேண்டும். உற்பனத்தோடு அன்றெடுத்த கோமயத்தை அன்றே யுருட்டியாக்கினும் உலர்த்திய பின்னாக்கினும் கற்பமென்றே பெயர்பெறும். இரண்டாவது அநுகற்ப மாவது சித்திரை மாதத்தில் வனங்களிற் சென்று உலர்ந்து கிடக்கின்ற சாணத்தைக் கொணர்ந்து இடித்துப் பஞ்சகவ்வியம் பெய்து முன்சொன்னபடி மந்திரங்களால் விளைவிப்பதாகும். மூன்றாவது உபகற்பமாவது காட்டி லுலர்ந்த சாணங் கொணர்ந்து கோசலமாத்திரம் பெய்து முன்சொன்ன ஆகமவிதிப்படி விளைவிப்பதாகும். நான்காவது அகற்பமாவது வனங்களில் இயற்கையாய் அக்கினியில் வெந்து வீழ்ந்து கிடக்கும் சாம்பலைக் கொணர்ந்து பஞ்சகவ்வியம் பெய்து மந்திரங்களா லுருட்டி வைத்துக் கொள்வது. இராஜனே இத்தகைய விபூதியிலொன்றை யணிந்துகொள்ளக்கடவாய்.

## உருத்திராட்சமகிமை.

உருத்திராக்கமணியானது நமது சிவபெருமானது திரிநேத்திரங்களிலிருந்து உண்டாகிய அருட்கண்ணீரின் சொரூபம். இது பலமுகங்களோடு கூடி விளங்கும். ஒருமுகம் சிவசொரூபம், இது பிராமணரைக்கொன்ற பாவத்தைப் போக்கும். இருமுகஞ் சிவ

சத்தி இது பசுவைக்கொன்ற பாவத்தைப் போக்கும். மூன்று முகம் அக்கினிசொரூபம் இது மாதரைக் கொன்ற பாவத்தைப் போக்கும். நாலுமுகம் பிரமன்சொரூபம் இது மனிதரைக்கொன்ற பாவத்தைப் போக்கும். ஐந்துமுகம் வாயுசொரூபம் இது நீசப் புணர்ச்சியின் பாவத்தைப் போக்கும். ஆறுமுகம் சுப்பிரமணியக் கடவுள் சொரூபம் இது பிரமகத்திப் பாவத்தைப் போக்கும். ஏழு முகம் ஆதிசேஷ சொரூபம் இது பசுவைக்கொன்ற பாவத்தையும் பொன்களவாடிய பாவத்தையும் போக்கும். எண்முகம் விநாயக சொரூபம் இது குருபத்தினியைப் புணர்ந்த பாவத்தைப் போக்கும். ஒன்பதுமுகம் வயிரவசொரூபம் இது பாம்புகளைக்கொன்ற பாவத்தைப் போக்கும். பத்துமுகம் விஷ்ணு சொரூபம் இது பேய் பூதமாதிகளால் வந்த பயம்போம். பதினொருமுகம் பதினொ ருருத்திர சொரூபம் இது அசுவமேத மாயிரஞ் செய்த பலனைத் தரும். பன்னிருமுகம் துவாதச சூரியர் சொரூபம் இது அசுவம் பசு முதலிய தானங்கொடுத்தபலனைத் தரும். பதின்மூன்று முகம் முருகன் சொரூபம் இது சகல சயங்களைக் கொடுக்கும். பதினான்குமுகம் சிவசத்தி சொரூபம். இது பதமுத்தியைத்தரும். பதினைந்துமுகம் நாதசொரூபம் இது கிடைப்பது அரிது கிடைத்தால் கண்டத்தி லொன்று தரிக்கின் இது முத்தியினையே கொடுக்கும். * உருத்திராட்சத்தைக் காணின் பிரயோசனம் இலட்சம். பரிசிக்கில் பலன் கோடி. தரிக்கில் பலன் ஆயிரங்கோடி. கணகோ மாயினும் ஒரு நாய்க்குத் தரிக்கில் அது நற்கதியடையுமெனில் மனிதர் தரிக்கில் அவர்களடையும்பலன் இவ்வளவென மதிக்கற்பாலதோ. உருத்திராக்கம் தரியாது சிவாலயஞ் சென்றிடினும் சிவ பூசை செய்திடினும் புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்யினும் பிரயோசனப்படாது. உருத்திராக்கம் தரியாது தன்னைச் சைவனென்று சொல்லிக்கொள்வது கழுத்தில் மாங்கலிய மில்லாதவள் தன்னைச் சுமங்கிலி யென்று சொல்லிக்கொள்வதை யொக்கும். இராஜனே! இத்தகைய கண்மணிகளில் எதையாவது மாலையாகக் கண்டத்தில் தரித்துக்கொள்ளக்கடவாய்.

---

* உருத்திராக்கமணியால் இன்னின்னபாவங்கள் போமென்று இவ்விடத்தில் குறித்தது அபுத்திபூர்வமாக வியற்றிய பாவங்களுக்கன்றிப் புத்தி பூர்வமாக வியற்றிய பாவங்களுக்கன்று.

## பஞ்சாக்கரமகிமை.

பஞ்சாட்சரமானது நமது சிவபெருமானுடைய திருநாமமாகிய மகாமந்திரம். இம்மந்திரத்தின் நகாரத்தில் திரோதசத்தியும், மகாரத்தில் மலமும் சிகாரத்தில் சிவமும் வகாரத்தில் அருளும் யகாரத்தில் ஆன்மாவும் நிற்கும். இவ்வைந்தும் பதி பசு பாச மூன்றி லடங்கும். எங்ஙனமென்னின் சிவ்வும் வவ்வும் நவ்வும் பதியின் கூறுகிய சிவத்திலும், அருளிலும், திரோதசத்தியிலு மடங்கும். யகரம் பசுவி லடங்கும். மகரம் பாசத்தி லடங்கும். அஞ்ஞானமாகிய மலமும் அதனோடு கூடி யிருக்கப்பட்ட திரோதான சத்தியும் ஆன்மாவைப் பொருந்தாம னீங்கும்படி சிவ முன்னாக வுச்சரித்தால் திரோத மொருபாலும், அருளுஞ் சிவமு மொருபாலும் முன் பின் சூழ்ந்து நிற்க நடுநின்றது ஆன்மா. அப்போது நவ்வாகிய திரோதசத்தியும், மவ்வாகிய மலத்தின் மேலீட்டை நீக்கி யருளாக நின்று பிரகாசிக்கும். மலத்தினின்றும் மீளப்பட்ட வவ்வாகிய வருள் சிவ்வாகிய சிவத்தையும் தாராநிற்கும். பின்பு மலபாகம்வந்த யவ்வாகிய ஆன்மா வகாரமாகிய அருள் தாரகமாகச் சென்று அந்தச் சிகாரமாகிய சிவத்தோடுங் கூடி யிரண்டறநின் றனுபவிக்கும். இராஜனே! இத்தகைய வேதமூல மகாமந்திரமாகிய பஞ்சாட்சரத்தினை யுச்சரிக்கக்கடவாய்.

இம்மூன்று சாதனங்களையும் கைக்கொண்டு சிவலிங்கப்பெருமானைத் தினம் ஆயிரம் வில்வங்கொண்டு அருச்சனைசெய்து வருவையேல் புண்ணியமடைவாய். அதற்குரிய திவ்வியதலம் இவ்வரமூர்த்தி க்ஷேத்திரமே. இவ்விடத்தில் வைகுண்டமூர்த்தியாகிய விஷ்ணுவானவர் நெடுங்காலமாக அரசமரமாக விருந்துகொண்டு தவஞ்செய்து வருகின்றனர். இவ்வரணிநதியில் முகுந்தன் பொருட்டுக் கங்கைநதியானது கிளையாய்ப் பாய்ந்துகொண்டிருக்கிறது. இதனால் அரியதுறை யென்றும் இதற்கு ஒருபெயர் வாய்ந்தது. ஒருமாதம் இவ்விடத்தில் பூசைசெய்து வருவையேல் உனது பாவமனைத்து முன்னைவிட் டொழிந்து விடுமென்பதிற் றடையில்லை. என்றனர். முனிவர் அருமையான வார்த்தைகளையெல்லாம் இராஜன் அமைதியுடன் கேட்டு ஆனந்தமுற்றுத் தனது தருமபத்தினியாகிய சுசீலையுடன் முனிவர்சொன்னபடி அரணிநதியில் ஸ்நானஞ் செய்து விபூதி ருத்திராட்சம் பூண்டு பஞ்சாட்சர நாவினனுய்ச்

சிவபூசைக்கு ஆரம்பித்துப் பிரதிதினம் ஆயிரம் பிரதட்சணஞ் செய்து பிராமணபோஜனம் கஜதானம் அசுவதானம் கோதானம் பூதானம் கன்னிகாதானம் சொர்னதான முதலிய அபாரமாகச் செய்து வந்தனன். ஒருநாள் இராஜன் முன்னிலேயில் பரிபூரண சச்சிதானந்தப் பிழம்பாகிய வரமூர்த்திநாதர் தரிசனந் தந்து அரச! உனக்கு ஒரு சற்புத்திரியும் சற்புத்திரனும் பிறப்பர். அவர்களால் உன்வமிசமானது விருத்தியாகும். நீ பூர்வஜென்மத்திற் செய்த பாவமனைத்து முனேவிட்டொழிந்தது. இனி யஞ்சற்க வெனத் திருவாய்மலர்ந்தருளினர். இராசன் கேட்டுப் பேரானந்தமடைந்து ஆடி:—

ஆலத்தை யமுதாக் கொண்ட வாகா சிவனே போற்றி
பாலத்தில் விழியை வைத்த பரமசற் குருவே போற்றி
சூலத்தைக் கரத்திற் கொண்ட சுகுணசுந் தரனே போற்றி
கோலத்தைக் கண்டேன் கண்டேன் கொன்றைசூடியனேபோற்றி.

புத்திரப் பேறு தந்த புண்ணிய சொரூப போற்றி
உத்தம கௌரி தன்னே யொருபுறங் கொண்டாய் போற்றி
நித்திய ஞகி யென்று நிலேத்தபே ரொளியே போற்றி
கத்தனே கண்டேன் கண்டேன் கருணேயங் கடலே போற்றி.

எனப் பலவிதமாகப் பாடி அடியற்ற பனேபோலப் பலதரம் பூமியில் விழுந்து எழுந்து அகாரவாச்சியனுகிய வமலனே! மன்னித்தருள வேண்டும்! மன்னித்தருள வேண்டும்!! அடியேன் மாட்டுத் தேவரீர் கிருபைபுரிந்து கடாட்சித்தருளிய புத்திரி பச்சிளங் கிள்ளேயாகிய பார்வதியம்மையார்போன் றிருக்கவேண்டும். புத்திரனே மூதறிஞர்போற்றும் முருகவேள்போலிருக்கவேண்டும் என்று பிரார்த்தித்தனன். அங்ஙனமேயாகுகவெனத் திருவாய்மலர்ந்தருளி சுவாமியந்தர்த்தான மாயினர். பின்பு அரசன் உரோமசமுனிவரிடத்தில் விடைபெற்றுத் தனது தியாகசமுத்திரமென்னும் பட்டினத்தை நோக்கிச் செல்ல, தனது மந்திரி பிரதானிகள் எதிர்கொண்டு வர சேனுசமுத்திரஞ் சூழ்ந்து மங்களவாத்திய முழங்க வடைந்து பழையபடியே அரசாட்சி செய்துகொண்டிருந்தனன்.

ஒருநாள் வசந்தகாலத்தில் அரசன் தனது மனைவியாகிய சுசீலையுடன் ஒரு அரிய பெரிய நந்தனவன மடைந்தனன். அங்குள்ள காந்தள் மல்லிகை முல்லை மௌவல் கருமுகை கொன்றை குருக்

கத்தி இருவாட்சி பிச்சி முதலிய கொடிவகைகளெல்லாம் படர்ந்திருப்பதனை வேடிக்கையாகப் பார்த்து வருகையில், அந்நந்தன வனமத்தியில் ஒரு அழகிய செய்குன்றிலேறி யொரு தடாகத்துற்ற செங்கழுநீர்ப் புட்பத்தின் விசித்திர அழகினைப் பார்த்துக் கொண்டிருக்கையில், அதில் மரகத சாயலாக ஒருபெண் குழந்தையும், மன்மதனையு மயக்கத்தக்க ஒரு ஆண் குழந்தையும் மூன்று வயதுடனே தோன்றிப் பிரகாசித்துக்கொண்டிருப்பதனை அரசனும் அவன் மனைவியுங் கண்டு மயங்குகையில், இவர்களே யுங்கட்குப் புத்திரியும் புத்திரனுமென ஆகாயத்தில் அசரீரி உண்டாயது. அரசன் பரவசமடைந்து தனது மனைவியை நோக்கிப் பெண்ணே! உன்குழந்தைகளை யெடுத்துவருவாயென்றவுடனே அவள் தனங்களிலிருந்து பால் சுரந்தது. உடனே இருவரும் அக்குழந்தைகளை யெடுத்து மார்போடணைத்து உச்சிமோந்து பலதர முத்தமிட்டுத் தங்கள் மாளிகைக்குக் கொண்டுவந்து, நாளொருவண்ணம் பொழுதொரு மேனியாக வளர்த்து வந்தனர். அரசன் தனது புத்திரிக்கு என்னபெயரிடுவதெனத் தனது புரோகிதராகிய தௌமியரைக் கேட்க அவர் அப்பெண்ணின் அதிரூபலா வண்ணியமான சாயலைக் கண்டு மரகதவல்லி யென நாமகரணஞ் சூட்டினர். அப்பெண் சிற்சில நாளில் மேகத்தை யொத்த கூந்தலினையும், மூன்றாம் பிறை யொத்த நெற்றியினையும், கரும்பு வில்லினை யொத்த புருவத்தினையும், நீலோற்பல மொத்த விழிகளையும், எட்பூவினை யொத்த மூக்கினையும், வள்ளைப் பூவை யொத்த செவிகளையும், குமுதப் பூவை யொத்த வாயினையும், முத்துக்களை யொத்த பல் வரிசைகளையும், கோவைப் பழத்தினையொத்த உதடுகளையும், கண்ணாடியையொத்த தாடையினையும், சங்கையொத்த கழுத்தினையும், மூங்கிலையொத்த புயங்களையும், தங்கக்கலசத்தை யொத்த தனங்களினையும், ஆலிலை யொத்த வயிற்றினையும், வாழைத்தண்டை யொத்த துடைகளையும், வரால்மீனையொத்த கால்களையும், ஆமைமுதுகை யொத்த பாடுகளையும் வாய்க்கப் பெற்று மிகச் சௌந்தரவதியாக விருப்பதை அரசன் கண்டு இத்தகைய அரிய எனது புத்திரிக்குத் தக்க நாயகன் இவ்வுலகத்தில் யாரைத் தேடுவது. இம்மாதுக்குச் சமானமானவர் இவ்வுலகில் யாரிருக்கின்றார்கள் என ஆலோசித்துத் தனது புரோகிதராகிய தௌமியருடன் கலந்து பேசுங்கையில் அவரு நெடுநேரஞ் சிந்தித்து இம்மாது சிரோமணிக்குத் தகுதியான புருடனை

நாம் கண்டுபிடிப்பது மிக வருமையாகையால், "சுயம்வர நாட்டு வோம் திருவருட் சம்மதியாக எந்த அரசனுக்குச் சம்மதியாமோ அந்த அரசனுக்கு உன் புத்திரி மாலை சூட்டட்டும் என்றனன். அர சனதற்கிசைந்து அப்படியே எங்குந் தெரிவித்துப் பிரசித்தியாக் கிச் சுயம்வரம் நாட்டினன். பற்பல தேயத்து அரசகுமாரரனைவ ரும் சர்வாடம்பரத்துடன் குறித்ததினத்தில் வந்து சேர்ந்து திரு மணப் பந்தலில் நெருங்கினர். மாகதவல்லியைத் தெய்வலோக சுந் தரியைப் போல அலங்காரஞ் செய்து கல்யாணப் பந்தலினுக்கு இட்டுக்கொண்டுவருஞ் சமயத்தில், ஒரு யௌவன விடபுருஷனாய் அனேக கோடி மன்மதர்கள் ஒருங்கு சேர்ந்தாலென்னச் சௌந்த ரியம் வாய்ந்தவனாய்க் கோடி சூரியப் பிரகாசமுடையவனாய் ஒரு அர சகுமாரனைப் போன்று, இரத்தினகஜிதமான ஒரு தேரின் மீது வந்து மாகதவல்லியைத் தூக்கித் தன்மடியில் வைத்துக்கொண்டு அதிவிரைவாகத் தேரைச் செலுத்திக்கொண்டு போயினான். அங் குக் கூடியிருந்த அதிவீரர்களாகிய அரசகுமாரர்க ளனைவரும் கண்டு ஆச்சரியமுற்று இஃதென்ன அநியாயமாய் யாரோ ஒருவன் வலிய வந்து பலாத்காரமாக இப்பெண்ணைக் கொண்டுபோகின்றன னே இவனை இலேசில் விடப்படாது எங்ஙனமாவது இவனுடன் போர் செய்து மடக்கிக்கொண்டுவர வேண்டுமென்று யாவரும் வீராவேசங்கொண்டு எழுந்து தங்கள் தங்கள் ஆயுதத்துடன் யுத் தசந்நதராகித் தேரின்பின்றொடர்ந்து செல்லுகையில், அத்தோா னது அதிவேகமாகச் சென்று உரோமசமுனிவரது பன்னசாலை யிற் புகுந்து வாமூர்த்திநாதர் ஆயலத்திற் பிரவேசித்து மறைந்து விட்டது. பலவரசர்களும் பின்சென்று தாங்களும் கோயிலுட் பிரவேசிக்க அங்கெழுந்தருளியிருந்த நந்தியம்பெருமான் எழுந்து ஒரு பிரம்பினைக்கொண்டு யாவரையு மடிக்க எல்லோரும் பலவழி யாக வோட வாரம்பித்தனர். அரசன் மாத்திரம் நந்தியம்பெரு மானை மிகுந்த பயபத்தியுடன் வணங்கி விடைபெற்றுக் கோயிலிற் பிரவேசித்துத் தரிசிக்கையில் வாமூர்த்திநாதர் தனது புத்திரி மா கதவல்லியுடன் திருமணக் கோலத்துடன் எழுந்தருளியிருக்கும் காட்சியினைக் கண்ணுற்றுத் தனது புத்திரி பார்வதிதேவியேயெ னத் தீர்மானித்துக் கீழே பலதரம் விழுந்து எழுந்து இரண்டுகாங் கனையும் அஞ்சலியாகக் குவித்து வாமூர்த்திநாதர் தன்னிடத்துக் கிருபைபாலித்துச் செய்த திருவிளையாடலை எண்ணி யெண்ணி

ஆனந்தித்து ஆடிப்பாடிப் பிரியா விடைபெற்றுத் திரும்பித் தனது இராச்சியத்தினைத் தன்னுடைய புத்திரனிடத்து ஒப்புவித்துத் தானும் தனது மனைவியும் உரோமசமுனிவரிட மடைந்து அவரா சீர்வாதம் பெற்று வரமூர்த்திநாதர் சிவாலயத்தில் பலவருடம் வரையில் திருத்தொண்டு புரிந்துவந்து சிவானந்தப் பெருவாழ் வினை யடைந்து சிவசாயுச்சிய முற்று வாழ்ந்தனர். இந்திரனே! இத்தகைய அருமையான மகிமையுடன் கூடிய திவ்விய தலத்தினு க்கு என்னுடன் வரக்கடவாயென்று அகத்திய முனிவர் பிரயாண ப்பட்டு வரமூர்த்திக்ஷேத்திரமாகிய அரியதுறையையடைந்தனர்.

சித்திரசேனன்பூசித்தசருக்கம்

முற்றுப்பெற்றது.

---

# இந்திரன்பூசித்தசருக்கம்.



நைமிசாரணியவாசிகளே! அகத்திய பகவானும் அசுரவடி வங்கொண்ட தேவேந்திரமகாராஜனும் அரணிநதிதீரத்திலுள்ள வரமூர்த்திதலமடைந்து உரோமசமுனிவர் ஆசிரமத்தை நெருங் கிய மாத்திரத்தில், உரோமசர் திடீரென வெழுந்து அகத்தியபக வானை யாலிங்கனஞ் செய்துகொண்டு க்ஷேமலாபங்களை வினவிய போது, அகத்தியர் உரோமசமுனிவரை நோக்கி ஐய! உமது புண் ணியமே புண்ணியம். முகுந்தன் பொருட்டுக் கங்கை இத்தலத் தில் வந்திருக்கிறது. நாராயணமூர்த்தியே அரசமரமாக விருந்து கொண்டு தவஞ்செய்து வருகின்றனர். இத்தகைய தலத்திலேயே நீ வாழ்ந்துகொண்டிருக்கிறாய். நல்லவர்கட்கு எல்லாம் இலேசாகக் கூடிவரும். இத்தலம் கைலாசமே எனப்படும். இத்தலத்தில் வாழ் பவர்கட்கு எக்காலத்தும் பிறப்பென்பது கிடையவே கிடையாது என்றனர். உரோமசமுனிவர் குறுமுனிவரை நோக்கி ஐயனே! தங்கள் ஆசிர்வாதத்தினாலேயே எனக்கு எல்லா பாக்கியமுங்கிடை த்திருக்கின்றது. தங்கட்குச் சமீபத்தி னின்றுகொண்டிருக்கிற மிகப் பயங்கரரூபமான இராட்சசன் யார் என்று கேட்டனர். உரோமசரே! இவர் இந்திரன். இவர் வலாசுரனைக்கொன்று அவன் எலும்பை வாரி இரைத்தபோது அவ்வெலும்பு என்சிரசில்விழவே

நான் சபித்துவிட்டேன். இச்சாபத்தினை யொழிக்கவே இங்கு அழைத்து வந்தேன் என்றனர். உரோமசமுனிவர் இந்திரனைப் பார்த்து, அசுரவடிவங்கொண்ட தேவேந்திரனே! இது எல்லா வரங்களையும் கொடுக்குந் தலமாகும். சகல பாவங்களையும் போக்க டிக்கத் தக்கது. எல்லாப் புண்ணியங்களையு முண்டாக்கும். இச்சி வாலயத்தினை யொரு பிரதட்சணஞ் செய்யின் பாதக மனைத்தும் பஸ்மீகர மாகும். இரண்டு பிரதட்சணஞ் செய்யின் சகல ஞான சித்தியுமுண்டாம். மூன்று பிரதட்சணஞ் செய்யின் மோட்சமே கிடைக்கும். முகுந்தன் பொருட்டு இவ்விடத்தி லுண்டாயிருக்கிற கங்கையிற் படிந்தால் மறுஜன்மமே கிடையாது. இந்நதியி லிருந்து ஒரு துளி நீர் மேலே படுமாகில் இந்திரபதவி யுண்டாம். இத்தலத் தில் நீ கிரமப்படி விபூதி ருத்திராட்சம் பூண்டு பஞ்சாட்சரம் செபித்து வேதத்தில் விளையாடும் விமலனாகிய வரமூர்த்தியினைப் பூசித்துப் பழைய உருவத்தினைப் பெற்று உனது பொன்னுலக மடையக்கடவா யென்றனர். இந்திரன் கேட்டு மிக்க சந்தோஷ மடைந்து உரோமசரைப் பணிந்து ஆசீர்வாதம் பெற்று அவ்விடம் விட்டு நீங்கி அரணிநதியிற் படிந்து விபூதிசண்ணித்து உருத்ராட்ச கண்டிகை பூண்டு துதிப்பதற்கருமையான பஞ்சாட்சரமந்திர தியா னம் நாவாரச்செபித்துச் சர்வ மங்களகரனை சிவபெருமான் திரு வடியைச் சிந்தித்து மெள்ள மெள்ள நதிக்கரையினின்று நீங்கிச் சிவாலயத்தை யணுகி, உட்புகுந்து கிரமப்படி வலஞ்செய்து மூவு லகமும் வணங்கப் பெற்ற இறைவனைக் கண்களாற்பெற்ற பயன டையத் தரிசித்துக் கசிந்து உருகிக் கண்களினின்றும் ஆனந்தபா ஷ்பம் சிந்த நின்று பசிய மாதுபாகத்தரைப் பரிந்து போற்றி விதி ப்படி பூசையாற்றிச் சற்றுநேரம்வரையில் தியானித்திருந்தனன். பின்பு இளமுலைக்கன்னியாகிய கௌரியாம் மரகதவல்லியையும் பூசை புரிந்தனன். இந்தப்பிரகாரம் நித்தமும் பூசனை செய்து நின் மலன் மந்திரத்தினை யெண்ணி வேனிற்காலத்தில் அக்கினியின் மத்தியிலிருந்தும் மற்ற பருவத்தில் புனலின் மத்தியிலிருந்தும் நோன்பு நோற்ற உத்தமகுணத்தினனையொழுகிக் கைகளை மேலே யுயர்த்தி நிராலம்பமாகப் பொருந்தி வினையினின்று நீங்கினவனாய் அசுர வடிவ மொழிந்து பழைய தேஜசை யடைந்து நிற்க மலைவ ளர்காதலி மணாளனாகிய பரசிவப்பிரபு கண்குளிரப் பார்த்துத் திரு வுளத்திற் கருணை பொங்கத் தேவர்கள் பூமாரி பொழிய இமைய

மாது இடதுபாகத்தில் மேவ வெள்ளை விடையின்மீது பூதகணங்கள் சூழத் தேவேந்திரனுக்குக் காட்சிதந்தருளினர். இந்திரன்விரைந்து எழுந்து சிந்தைமகிழ்ந்து கரங்கூப்பிக் கண்களினின்று நீர்சிந்த மண்மேல் விழுந்து வணங்கி வலம்வந்து ஆணவத்தின் வலிகெட அறிவோடு போற்றினன். தருமம் யாகம் யோகம் ஞானமெனு மிவற்றால் வழிபடுவோர்க்கு அவற்றின் பயனையருளு மொருவனே சரணம்! அகில முழுவதற்கு முதல்வனே சரணம்! அருட்செல்வனே சரணம்! அப்ரமேய அநாமய நிர்க்குண நிரஞ்சன பிரணவ சொரூப நாமரூப ரகித கைலாச சிகர வாச உமார்த்த கிருதசேகர மிருகவஸ்த பஸ்ம தூளித விக்கிரக பஞ்சாநந சந்திர சேகர வியாக்ர சர்மாம் பரதர பஞ்ச கிருத்திய சம்பன்ன ஆண்டருளும் அடிமையை யாண்டருளும் அறியாது செய்த பிழை யனைத்தும் மன்னித்தருளும் என்று பலவாறாகத் தோத்தரித்து நிற்க, அத்தோத்திரத்தினுக் கிரங்கிப் பெருங்கருணை வள்ளலான சிவபெருமான் குளிர்ந்த புன்சிரிப்பை வழங்கி இந்திரனே! உன்னைப் பிடித்த பாதக மனைத்து முன்னைவிட்டு நீங்கிவிட்டது. நீ பழையபடியே உனது லோகஞ் சென்று வாழ்ந்து தனுர் மாதம் சுக்கிலபட்சம் அஷ்டமியில் வருடந்தோறும் வந்து இத்தலத்தில் நம்மைப் பூசித்துப் போகக்கடவா யென்று திருவாய்மலர்ந்தருளி அந்தர்த்தான மாயினர்.

இந்திரன்பூசித்தசருக்கம்

முற்றுப்பெற்றது.

---

## கன்னிகைகள் பூசித்தசருக்கம்.

சிவஞான தபோதனர்களாகிய நைமிச முனிவர்களே! தியாகசமுத்திரமென்னும் பட்டினத்திலே சம்புதத்தனென்னும் அரசன் சதுரங்க சேனாசமுத்திரத்தால் சூழப்பட்டுத் தக்க புத்திமானாகிய மந்திரியுடனே அரசாட்சி செய்துவருங்காலத்தில் அவனுக்குச் சதமன்யூ முதலிய புத்திரர்கள் பிறந்தனர். சதமன்யூ அதிபராக்கிரம சாலியாய்ச் சகலகலைகளும் பயின்று தனக்கு நிகரற்றவனாய் வருகையில், ஒருநாள் தனது தம்பிமாருடன் வேட்டையா

டக் கருதிக் குமுதாரண்ணியம் சென்று அனேக மிருகங்களைச் சாரமண்டலமிட்டு வேட்டையாடி வருகையில், ஒரு பெரிய சிங்கமானது எதிர்த்துவர அதனுடன் யுத்தஞ்செய்து அது ஓட்டமெடுக்கும்படி யடிக்க, அது பயந்து ஓட ஆரம்பித்தது. அதனைப் பின்றொடர்ந்து சென்று வெங்கடகிரிக்குச் சமீபத்தில் அதனைக்கொன்று அதிக சிரமத்துடன் திரும்பி வருகையில், தியாகசமுத்திர அரசனே அபயம்! அபயம்! மாயாவி என்னும் ஒரு குரூர அசுரன் என்னைக்கொண்டு போகின்றான். என்னை மீட்டு ஆட்கொள்ளவேண்டும் என ஒருசத்தம் கேட்டது. சதமன்யூ எட்டுத்திசையிலுந் திரும்பிப் பார்த்து ஒன்றுங் காணாது ஆகாயத்தை நோக்குகையில் ஒரு ஸ்திரியைக் கண்டு நீ யாரென்றனன். அவள் மகாராஜனே! நான் அப்சரஸ்திரிகளி லொருத்தி சுகேசினி என்பவள். நான் அழகான தலைமயிரை வாய்ந்திருத்தலினால் அப்பெயர் பெற்றேன் நான் தனியே ஒரு நந்தனவனத்திலிருக்கையில் இவ்வசுரன் என்னைவலிய கிரகித்துக்கொண்டு தட்சணதேசம் போகின்றான். தெய்வகிருபையால் உன்னைச் சந்தித்தேன். இந்த ஆபத்தினின்றும் என்னை இரட்சித்தால் நீயே யெனக்குக் கணவன். நானே யுனக்கு மனைவி யென்றனள். அரசன் உடனே ஒரு பாணத்தை யேவி அவ்வசுரனைக் கொன்று அவளை மீட்டுக்கொண்டு தன்தகப்பனிடஞ் சென்று நடந்தவிருத்தாந்தத்தை யெல்லாஞ் சொல்லித் தனது குறிப்பினையுந் தெரிவித்தனன். அரசனாகிய தந்தை ஆலோசனை செய்து அங்ஙனமே விவாகஞ் செய்து வைத்தனன். இவர்களிருவரும் வெகுகாலமாகப் பிரியாமல் வாழ்ந்து வந்தனர். சதமன்யூ அவளைவிட வேறொன்றினு மிச்சை யில்லாதவனாக விருந்தான். இவர்கட்கு அதிரூப சௌந்தரிய வதிகளாய் மூன்று பெண்கள் பிறந்து நாளொருமேனி பொழுதொருவண்ணமாக வளர்ந்து வந்தனர். அவர்கள் யௌவனதிசையடைந்து ஒருநாள் வேடிக்கையாகத் தங்கள் பட்டினத்திற்குச் சமீபத்திலுள்ள ஒரு உத்தியானவனமடைந்து விளையாடிக்கொண்டிருக்கையில், அங்கே தவஞ்செய்துகொண்டிருந்த எட்டுக் கோணலினையுடைய அஷ்டவக்கிர முனிவரைக் கண்டு நமஸ்காரஞ் செய்தார்கள். அப்பெண்களை அம்முனிவர் கண்டு மின்னற்கொடிபோன்று விளங்கும் பெண்மணிகளே! நீங்கள் மூவரும் என்னை விவாகஞ்செய்துகொள்ள வேண்டும். உங்கள்மீது மோகங்கொண்டுள்ளேன் என்றனர். பெண்கள் மிக அச்

[illegible] முனிபுங்கவரே! நாங்கள் எமது [illegible] கொண்டிருக்கிறோம். அவர் கட்டளைப்படி நாங்கள் [illegible] வேண்டியது. எங்கட்கு யாதொரு சுதந்திரமும் [illegible] சொல்லிவிட்டுத் தங்கள் வீட்டிற்குச் சென்றனர். உடனே முனி வர் அரசனிடம் சென்றனர். அரசன் முனிவரைக் கண்டு எழுந்து வேண்டிய உபசாரங்களைச் செய்து ஒரு ஆசனத்தின்மீதி லெழுந் தருளச் செய்து சமீபத்தில் பயபத்தியுடன் நின்றுகொண்டு முனி வரனே தேவரீர் அடியேனை யொருபொருட்டாக மதித்து இவ்வ ளவுதூரம் வந்தருளியதென்னை? அடியேனு லாகவேண்டிய காரியம் யாதுளது? தயைசெய்தருளவேண்டுமென்றனன். இதனைக்கேட்ட முனிவர் அரசனை நோக்கி இராஜனே! உமது அருமையான புத்தி ரிகளை எனக்கு விவாகஞ்செய்து கொடுக்கவேண்டும் தடைசெய் யப்படாதென்றனர். அரசன் கேட்டுத் திடுக்கிட்டு ஒன்றுந் தோன் ருது சிறிதுநேர மயங்கித் தெளிந்து இதற்கென் செய்வது. நமது பெண்களோ இவரைச் சிறிதும் இச்சியார்கள். நாம் இவருக்கு இவர் இஷ்டப்படி செய்யாவிட்டால் பெருஞ்சாப மிடுவர். இருத லைக்கொள்ளி எறும்புபோல விழிக்க நேர்ந்ததே என வியசன முற்று முனிவரே! இது எனது இஷ்டமன்று எனது புத்திரிகள் சம்மதப்படி நான் எந்தக்காரியமு நடத்தவேண்டும். அவர்கள் மன திற்கு மாருக நானடந்துகொண்டால் பின்பு அவர்கட்கு உண்டா கும் துன்பத்திற்கு நான் பாத்தியனுக வேண்டு மென்றனர். அவர் கள் யாரை இச்சிக்கின்றார்களோ அவர்கட்கே நான் விவாகஞ்செய் துவைத்தல் வேண்டு மென்றனன். அங்ஙனமாகுல் உமது பெண் களை இங்கு அழைப்பித்து எனக்கு நேரேவைத்துக் கேட்டு உண் மை தெரிந்துகொள் என்று முனிவர் கூறினர். அரசன் தனது புத் திரிகளை இராஜசபைக்கு அழைப்பித்துப் பெண்மணிகளே! நீங் கள் இம்முனிவரை விவாகஞ் செய்துகொள்ளப் பிரிய முண்டோ என்றனர். அப்பெண்கள் தங்கள் தலைகளைக் குனிந்துகொண்டு கண்களில் நீர்விட்டு நின்றனர். இந்தக் குறிப்பினுல் அவர்கள் தன் னிடத்துச் சம்மதியில்லா திருப்பதை முனிவர் தெரிந்துகொண்டு பெண்களே உங்கட்கு நாயகனுக வருபவருள் ஒவ்வொருவனும் பத்துக்கோணலையுடைய சதவக்கிரமாகக்கடவனென்று சபித்து விட்டுச் சென்றனர். அரசன் கேட்டு மிக்க துக்கசாகரத்தி லடை ந்து பெருமூச்சுவிட்டுப் பிரமித்துக்கொண்டிருக்கையில், அரசனே!

சஞ்சலப்படவேண்டாம் உமது பெண்கள் இவ்வுலகத்து மனிதர் களை விவாகஞ் செய்துகொள்ள யோக்கியதை யுடையவரல்லர். அவர்கள் தெய்வலோகத்து அப்சர ஸ்திரீகள். நீ பூர்வத்தில்செய்த புண்ணிய வசத்தினால் அவர்கள் உனக்குப் புத்திரிகளாகப் பிறந் தார்கள். இக்காரணத்தால் இவ்விபரீதம் நேர்ந்தது. இப்பெண்கள் அரணிகதிரத்திலுள்ள அரியதுறை யென்னும் க்ஷேத்திரத்தினை யடைந்து அவ்விடத்திலுள்ள முகுந்தமுனிவருக்குத் தொண்டு செய்து வரமூர்த்திநாதரைக் கிரமப்படி பூசித்து வரும்படி செய் என ஆகாயத்திலொரு அசரீரி பிறந்தது. அரசனும் கேட்டு ஆனந் தமடைந்து அங்ஙனமே அத்தலத்திற்குத் தனது பெண்களை யனுப்பி வைத்தனன்.

அம்மூன்று பெண்களும் அரியதுறை என்னுந் தலத்தினை யடைந்து அங்கே அரிய பெரிய தவஞ்செய்துகொண்டிருக்கிற முகுந்தமுனிவரின் திருவடியில் விழுந்து எழுந்து எதிரிலே கைகுவித்து நின்றனர். அங்ஙன நின்ற பெண்சிகாமணிகளை முனிவர் நோக்கிச் சொல்லுவாராயினர். பெண்ரத்தினங்களே! நீங்கள் மூவரும் கல்வி நன்கு கற்றிருக்கின்றீர்கள். உங்கட்கு அஷ்டவக்கிரமுனிவரால் உண்டாகிய சாபத்தினைத் தெரிந்து கொண்டேன். அதற்காக நீங்கள் சிறிதும் அஞ்சவேண்டாம். நீங்கள் அப்சரஸ்திரீகளானதால் உங்கட்கு இவ்வுலக விவாகம் வேண்டியதில்லை. தெய்வலோக விவாகமே சித்திக்கும். இப்போது நான் உங்கட்குச் சொல்லும் உண்மையினை தெரிந்துகொண்டு அங்ஙனமே நடப்பீரேல் தக்க கௌரமான சிவபத்தி வாய்ந்த தெய்வபுருஷன் உங்கட்குக் கணவனாவன். வேத சிவாகமாதிகளாலே நிச்சயித்துணர்ந்து ஈசனே அரிப் பிரமேந்திராதி யாவராலுந் தியானிக்கப் படுவானென்று ஓதப்படுகின்ற உமாபதியொருவனேயாம். அவனுக்குப் பூசனையைக் காட்டிலும் சிறந்த தொண்டு வேறில்லை. அகத்தும் புறத்தும் வேதசிவாகமவிதிவழுவாது சிவபூசனைசெய்பவ ரெவரோ அவர்களே துக்கசாகரமொழிந்தவ ராவர். அப்பூசனைக்கு இன்றியமையாத முக்கியாங்கமொன்று. அது அதிரகசியமாயுள்ளது, வினைமுழுது நீக்குவது, பிரபஞ்ச சாகரத்தினின்று மேலெடுப்பது, சிவசொரூபமாயுள்ளது, பஞ்சபாதக நாசஞ் செய்வது, ஞானசாதன மாவது, சப்தகோடி மகாமந்திரங்களெல்லாவற்றிற்கு நாயக

மாயிருப்பது, மத்திய வேதமாகிய எசுர்வேதத்தின் மத்தியிலுள்ள ஸ்ரீருத்திர மத்தியிலே சிவரத்தினமாய் விளங்குவது, இத்தகைய ஸ்ரீ பஞ்சாட்சரத்தை உங்கட்கு உபதேசிக்கின்றேன். ஆனால் அதற்குரிய முக்கியாங்க மொன்றுண்டு. அது விபூதிதாரணமே. செபந் தவமுதலிய எச்செயலும் பூதி சாதன மின்றிச் செய்யின், அச்செயல் முழுதும் ஓரணுவும் பிரயோசன மாகா. இது சத்தியம் என்று கூறி விரஜாக்கினியிலே விதிப்படி விளைந்த விபூதியை எடுத்து நீட்டினார். உடனே அம்மூன்று பெண்களும் நமஸ்கரித்தெழுந்து இரு கையும் விரித்து வாங்கி விதிப்படி உரிய மந்திரோச்சாரணத்தோடு தூளன திரிபுண்டரமாயணிந்துநிற்ப, மேற்கூறியபடியே ஸ்ரீ பஞ்சாட்சரோபதேசஞ் செய்தருளினார். மேலும் முனிவர் அவர்கட்குச் சிவசாஸ்திரநாம ரகசியார்த்தவைபவங்கள் விளங்க உபதேசித்து, சிவதத்துவார்த்தங்களெல்லாமும் மனத்திலமைந்து கிடப்பத் தெளிவித்து ஈசனொருவனே தியேயன், மற்றெவருந் தியாதாக்களென்று சுருதி கூறுகின்ற எதார்த்த பரத்துவ மகிமையைத் தெளிவாக விரித்தோதுகின்ற வேதாந்த உபதேசமுஞ் செய்தனர்.

மெய்ஞ்ஞானத்தினை யுணர்ந்த மூன்று பெண்களும் சிவானந்த சாகரத்தில் மூழ்கித் திளைத்து அரணிநதியில் ஸ்நானஞ் செய்து வெண்பட்டு பூண்டு, வேள்வியில் விளைந்த மந்திர நெருப்போடு, ஆகமக்கிரமப்படி அரணியிற் கடைந்தெடுக்கும் அக்கினியிற் சேர்த்துப் பிரதிதினம் அக்கினிகாரியஞ் செய்து வரமூர்த்தி நாதர் திருவடியில் தாக்கிய மனத்தை யுடையவர்களாய் மூவரும் சிதாகாய வெளியில் முயங்கி வருகையில் சிற்சிலநாள் சென்றபின்னர், நித்திரை செய்தோர் கரத்தினின்று நழுவிய பொருளைப் போலத் தாங்கள்தங்கள் செயல்களையெல்லாம் ஒழித்துப் பேரின்ப மேலீட்டினால் கலங்காது தங்களிருதயத்திலெழும் ஞானாக்கினியை யுள்ளத்திலொடுக்கித் துவாதசாந்த ஸ்தலமாகிய துரியாதீதத்தில் சிவபோகத்தோடு வாழ்ந்து கலி ஐயாயிரத்திற்குமேல் தெய்வலோகஞ்சென்று சுகமாக வாழ்ந்தனர்.

கன்னிகைகள் பூசித்தசருக்கம்

முற்றுப்பெற்றது.

---

## கண்ணனரசமரமானசருக்கம்.

சைவாசாரநல்லியர்களே! ஒருநாள் நாரதமுனிவர் கண்ணனைக்காண விரும்பிப் பாரிசாத புஷ்பத்தைக் கையிற்கொண்டு, துவாரகைக்குச் சென்று, கண்ணனுக்குக் கொடுத்து வணங்கினர். அப்போது உருக்குமணியானவள் அந்தப் புஷ்பத்தைப் பார்த்துத் தனக்குக் கொடுக்கச் சொல்லிக் கண்ணனைக் கேட்க அப்படியே கொடுத்தனர். அதைப் பார்த்துக்கொண்டிருந்த நாரதரானவர் சத்தியபாமையிடஞ் சென்று தான்கொடுத்த பாரிசாத புஷ்பத்தை உனக்குச் சிறிதேனுங் கொடாமல் உருக்குமணிதேவிக்குமாத்திரந் தந்தார். அந்தக் கண்ணனுடைய பட்சபாதம் இப்படி யிருக்கிறதென்று சொல்லித் தேவலோகஞ் சென்றனர். அடுத்த நாள் கண்ணன் சத்தியபாமையினுடைய வீட்டிற்கு வந்தனர். அப்போது சத்தியபாமை அந்த வரிதான பாரிசாத மலரை உருக்குமணிக்கு மாத்திரங் கொடுத்துத் தனக்குக் கொடாமலிருந்ததைக் குறித்து மனக்கவலை கொண்டு கோபித்திருந்தனள். அப்போது கண்ணன் உண்மை தெரிந்துகொண்டு சத்தியபாமையே! உருக்குமணிக்குப் பாரிசாதமலரைக் கொடுத்ததற்கு நீ வியசனப்படாதே, உன்னுடைய புறக்கடையில் அந்த விருட்சத்தைக் கொண்டுவந்து நாட்டுகிறேனென்று பிரதிக்கினை செய்தனர்.

அச்சமயத்தில் இந்திரன் கண்ணனிடம் வந்து ஐயனே! நரகாசுரனென்பவன் என்னுடன் யுத்தஞ் செய்து பொன்னுலகத்தினுள்ள பலபொருள்களையும் கொள்ளை கொண்டு போயினனென்றவுடன், அதுகேட்ட கண்ணன் சத்தியபாமையுடன் அந்நரகாசுரனுடைய பிராக்ஜோதிஷ மென்கிற பட்டணமடைந்து அவனோடு நெடுநாள் யுத்தஞ்செய்து 'அவனைக் கொன்று அவன் தேவலோகத்திலிருந்து கொண்டுவந்த பொருள்களை யெல்லாம் பழையபடியே இந்திரன் வசம் ஒப்பித்து விட்டுத் தானும் தன்மனைவி சத்தியபாமையுமாகப் பொன்னுல கடைந்தனர். அப்போது இந்திரனும் இந்திராணியும் எதிர்கொண்டு வந்து பலபுட்பங்களை யீந்து வணங்கி நின்றார்கள். அப்போது சத்தியபாமை கண்ணனை நோக்கிக் கேட்டீரா சுவாமி! இந்த இந்திராணி அடியேனைச் சாமானியமாக வெண்ணிக்கொண்டு, பாரிசாதமலர் கொடுத்துப் பணியாமல்

வேறு புட்பங்களைக் கொண்டு பணிந்தாள். இந்த அவமானத்தை நான் சகிக்க மாட்டேன், அந்த மரத்தை வேரோடு பிடுங்கிக்கொண்டு நமது துவாரகாபட்டினத்திற்குக் கொண்டுபோனாற்றான் இந்திராணிக்குக் கர்வபங்கமாகும் என்றனள். கண்ணன் கேட்டு அங்ஙனமே ஆகட்டுமென்று பிரதிக்ஞை செய்து இந்திரனிடத்தில் செவவு பெற்றுக்கொண்டு, துவாரகை சேர்ந்தனர். அப்பால் சில நாள் சென்ற பிறகு நாரதர் மறுபடியும் பாரிசாதமலர் கொண்டு வந்து கண்ணனுக்குக் கொடுத்துக் கண்டுகொண்டனர். கண்ணன் அந்த மலரை உருக்குமணிக்குக் கொடுத்துவிட்டனர். இதனைச் சத்தியபாமையினுடைய தோழிப்பெண்ணானவள பார்த்திருந்து சத்தியபாமையிடஞ் சென்று தான் உருக்குமணி வீட்டிற்குச் சென்றதும், அவ்விடம் நாரதர் வந்து பாரிசாதமல ரீந்ததும், அதைக் கண்ணன் உருக்குமணிக்குக் கொடுத்ததும், அவள் தனது கூந்தலிற் றரித்துக் கொண்டதும் கண்டேனென்று சொல்லினள். அதுகேட்ட சத்தியபாமை மிகுந்த கோபங்கொண்டிருக்கிற சமயத்தில் அவ்விடம் நாரதர் வந்து சத்தியபாமையே! நான் தேவலோகத்திலிருந்து அருமையான பாரிசாதமலரைக் கொண்டுவந்து கண்ணனிடம் கொடுத்தேன். அதனை யவர் உருக்குமணிக்குக் கொடுத்துவிட்டார். அன்றியும் நீ உனது நாயகனுடன் தேவலோகம் சென்றபோது இந்திராணி யுனக்குப் பாரிசாதமலர் கொடுத்துக் காணாமல் அவமதித்திருக்கிறாள் கண்ணனும் சாடையாக விருந்தார் என்றனர். உடனே சத்தியபாமை நாரதரே! கேட்பீராக இப்போது கண்ணன் பாரிசாத விருட்சத்தைக்கொண்டுவந்து கொடுத்தாலாச்சு, இல்லாவிடில் பிராணத்தியாகஞ் செய்கிறேனென்று கூறி நாரதரை யனுப்பிவிட்டு, தான் தரித்திருந்த ஆபரணங்களை யெல்லாங் கழற்றிவிட்டு, நல்ல வஸ்திரமுமில்லாமல் கூந்தல விழ்ந்து கிடக்க வொரு அறையில் பூமியிலே படுத்துக்கொண்டிருந்தனள். அச்சமயத்தில் கண்ணன் அவ்விடம் வந்து சத்தியபாமையைக்காணாமல் சமீபத்திலிருக்கிற வூழியப்பெண்களைக் கேட்க அவர்கள் பயபக்தியுடன் கண்ணனைப்பார்த்து என்னமோ கோபமாய் இருக்கிறதுபோல் காண்கிறதுஎன்றனர். அதுகேட்டகண்ணன் அவளிருக்குமிடஞ்சென்று அவள் நிலைமையைக் கண்டு முகம்வாடி அவளை யெடுத்துத் தனது மார்பிலே சாத்திக்கொண்டு எனது அருமைக் கண்மணியே! நீ யாது காரணத்திற்காக இவ்விதமா

யிருக்கிறாய், இது சரியல்லவே யாதுகொடுமை நான் உனக்குச் செய்தனன். மனதார வொன்றுஞ் செய்ய வில்லையே, உன்னிடத்தில் நான் வைத்திருக்கிற அன்பு உனக்கே தெரியாதா என்றனர்.

அதுகேட்ட சத்தியபாமை, கபடம்வாய்ந்த கண்ணனே! நீர் செய்துவருங் காரிய மனைத்துந் தருமந்தானா? நாரதமுனிவர் முதல் தடவை பாரிசாத மலரைக் கொண்டுவந்து கொடுத்தபோது எனக்குக் கொடாமல் வஞ்சித்து, அந்த விருட்சத்தை வேருடன் கொண்டுவந்து நாட்டுகிறேனென்று பிரதிக்கினை செய்தீர். தேவலோகத்தில் இந்திராணியால் அவமதிக்கப்பட்ட சங்கதியை நான் குறிப்பித்தும் அதற்குப் பரிகாரந் தேடவில்லை, இப்போது மறுபடியும் நாரதர் கொண்டுவந்த மலரை முறைப்படி எனக்குக்கொடுக்க வேண்டியிருக்க அங்ஙனம் செய்யவில்லை அல்லது உருக்குமணிக்கும் எனக்கும் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும் அங்ஙனமும்செய்யவில்லை, இதனையும் அவளுக்கே கொடுத்துவிட்டீர், இங்ஙனம் செய்து வந்தால் உருக்குமணி என்னை மதிப்பாளா? அவளுக்கு முன்னம் நானுயிருடன் வாழுவதைக் காட்டிலும் உயிரை விட்டுவிடுதலே நல்லது என்று கூறிப் பெருங்குரலிட்டு அழ வாரம்பித்தனள். இது தெரிந்த கண்ணன், எனது பிரியமான பெண்மணியே! இது தானா? நான் என்னமோ உனக்குத் தீங்குசெய்து விட்டதாக நினைத்திருந்தேன், இந்த அல்ப காரியத்திற்காகவா இவ்வளவு ஆடம்பரம் செய்து விட்டாய், 'பேதமை என்பது மாதர்க் கணிகலம்' என்றதை இன்று உன்பால் கண்டேன், நினது இஷ்டத்தினைக் கூடிய சீக்கிரத்திற் பூர்த்தி செய்கின்றேன் சிறிது மஞ்சறக்கெனப் பலவுபசாரவார்த்தைகளைக் கூறி அணைத்து முத்தமிட்டுப் பழையபடியே அலங்காரம் செய்து கொள்ளும்படி செய்து அழைத்துக் கொண்டுபோய் பள்ளியறையிலமர்ந்து வேடிக்கையாக விளையாடிக் கொண்டிருந்தனர். அச்சமயத்தில் அவ்விடம் வந்துசேர்ந்த நாரதமுனிவரைக் கண்ணன் கண்டு எதிர்வந்து நமஸ்கரித்து ஆசனத்திலெழுந்தருளப்பண்ணி, தான் சத்தியபாமைக்குச் செய்த பிரதிக்கினையைக் கூறி, ஏ முனிவரே! நீர் தயைசெய்து தேவேந்திரனிடம் சென்று பாரிசாத விருட்சத்தைச் சிலநாளைக்குப் பூமியிலிருக்கும்படி அனுப்புவிக்கவேண்டு மென்று யான் சொல்லியதாகச் சொல்லி வருவீரென்றனர். நாரதர் கேட்டுக் கண்ணபிரானே!

அந்தப் பாரிசாதவிருட்சமானது பூர்வத்தில் மகாகைலாசத்திலிருந்துகொண்டிருந்தது. தேவேந்திரன் அருமையான தவஞ்செய்து சிவபெருமானிடம் பெற்றுத் தன்னுலகத்திலே வைத்திருக்கின்ருன். இந்திரனும் இந்திராணியும் அவ்விருட்சத்தினிடத்தில் மிகுந்த அன்பு பாராட்டி வருகின்றனர். அவர்கள் அதை மண்ணுலகிற்கு அனுப்பச் சம்மதியார்களென்றனர். கண்ணன் நாரதரே! நீர் போய் யான் சொன்னதாகச் சொல்லும், அவன் அனுப்பாவிட்டால் எனது கௌமோதகி என்ற கதையால் இந்திரனுடைய மார்பைப் பிளந்து அவ்விருட்சத்தை யபகரிப்பே னென்று சொல்லக்கடவாயென்றனர். அது கேட்ட நாரதர் பொன்னுலகஞ் சென்றவுடனே இந்திரன் அழைத்துக் கொண்டுபோய்ப் பலவுபசாரங்கள் செய்ய நாரதர் மகிழ்ந்து கண்ணன் தன்னிடம் கூறிய அனைத்தையும் விவரமாகச் சொல்லினர். தேவேந்திரன்கேட்டு மிகுந்த கோபாவேசத்தனாகி நல்லது கண்ணனுக்கு இவ்விருட்சத்தையெடுத்துக் கொண்டு போகும் சாமர்த்திய மிருக்குமேயாகில் அவனிஷ்டப்படி செய்யட்டும் நான் கொடேன் என்றனன். அதுசங்கதி நாரதர் துவாரகை யடைந்து நடந்த விருத்தாந்த மனைத்தையும் கண்ணனுக்குக் கூறிச் சென்றனர்.

கண்ணன் கேட்டு உடனே எழுந்து தேவலோக மடைந்து பாரிசாத விருட்சத்தை வேரோடு பிடுங்கிக்கொண்டு திரும்புகையில் இந்திரன் தெரிந்து தனது சேனையுடன் வந்தெதிர்த்துப் பலநாள் யுத்தஞ்செய்ய ஆரம்பித்தனன். இந்த யுத்தம் என்னவிதமாய் முடியுமோ வென்று தேவர்களெல்லாம் பயந்து கொண்டிருக்கையில், அத்தருணத்தில் காசிபரும் அவர் மனைவியாகிய அதிதியும் யுத்தகளத்தை யடைந்து உண்மை தெரிந்து சண்டையினைவிலக்கி, கண்ணனுடைய விருப்பத்தினைத் தெரிந்து கொண்டு இந்திரனை நோக்கி ஐய! நீ என்ன காரியஞ் செய்தாய் கண்ணனை யாரென்று நினைத்தாய் உன் தம்பியாகிய உபேந்திரன் விஷ்ணு வல்லவா? அவ்விஷ்ணுவே பிருகுமுனிவர் சாபத்தால் பத்துச் சென்மம் உலகத்தி லெடுக்கும்படி செய்ததால், உல்கோபகாரமாக விஷ்ணு அடிக்கடி வந்து அவதரித்துப் பூமிபாரத்தை நீக்கி வருகின்றனர். அப்பிறப்புக்களுள் கண்ணனும் ஒரு அவதாரமன்றோ? ஒரு முறையில் இக்கண்ணன் உனக்குத் தம்பிமுறையே யாகும், ஆகையினுல் இவ

காலம் இவ்விருட்சம் அவர் வசம் இருக்கட்டும் என்றனர். அதுகேட்டு இந்திரன் அவ்விருட்சத்தைக் கண்ணனிடம் கொடுக்க அவர் கொண்டுவந்து சத்தியபாமையினுடைய புறக்கடையில் வைத்து வளர்த்து, அதன் புஷ்பங்களைச் சத்தியபாமையின் கொண்டையிற்சூட்டி ஆனந்தித்துவந்தனர். இங்ஙனம் அனேக வருடங்களாய் விடவே சிவானுக்கிரகம் பெற்று விளங்கும் அப்பாரிசாத விருட்சத்தின் அதிஷ்டான மூர்த்தியாகிய தெய்வம் ஒருநாள் கண்ணனிடம் நேர்நின்று ஐயனே! நான் எந்நாளும் தெய்வலோகத்தில் இருக்க வேண்டிய தன்மையை யுடையேன். உனது வேண்டுகோளினிமித்தம் மண்ணுலகில் வந்து இருக்கிறேன். பலவருடமாயிற்று, இனி யிருக்கமுடியாது நான் பழையபடியே தெய்வலோகம் போக உத்தரவு கொடுக்கவேண்டு மென்றனர். கண்ணன் கேட்டு, பாரிசாதவிருட்ச ரூபமாக விருக்கும் தெய்வமே! உன்னிடத்தில் சத்தியபாமை மிக அன்புடையவளா யிருக்கின்றாள், நீ பிரிந்து விட்டால் அவள் மிகத்துயரமடைவாள். அவள் துன்பத்தைக் கண்டு நான் சகியேன், அவளிடத்தில் நான் மிகப் பிரியம்வைத்திருக்கின்றேன் என்றனர். அது கேட்ட அத்தெய்வம் கண்ணனை நோக்கி ஐய! என்னவார்த்தை சொல்லுகிறாய், நீ மிகுந்த புத்திசாலியாக விருந்தும் முன்பின் ஆலோசியாது பேசுகின்றாய், நீ சத்தியபாமையாகிய ஒரு பெண்ணின் மோகத்தினால் நன்மை இன்னதென்று அறியவில்லை, நானோ தெய்வவிருட்சம், சத்தியபாமையோ மண்ணுலகத்துப் பெண்பிள்ளை, அவள் வீட்டில் நானிருக்கத்தகுமா? உன்பொருட்டன்றோ இதுகாறும் சம்மதித்திருந்தேன், நீ பெண்பித்தேறிக் காமசமுத்திரத்தில் மூழ்கி அறிவு மயங்கிப் பிதற்றுகின்றாய், உடனே என்னை யனுப்பி விடுவாய் இல்லையேல் பலவிபரீதம் விளையும் என்றது. கண்ணன் கேட்டு ஏ விருட்சமே! நீ என் செய்வாய் உனக்கு அரசனான இந்திரனாலேயே உன்னைக் காத்துக்கொள்ள முடிய வில்லையே, உன்னால் என்ன காரிய முடியும் வேறொன்றும் வார்த்தை சொல்லாமல் சத்தியபாமையினுடைய புறக்கடையிலே எந்நாளு மிருந்துகொண்டிருக்கக் கடவா யென்றனர்.

பாரிசாத விருட்சமான தெய்வங் கேட்டுக் கண்ணனே! என்னபேசுகிறாய், நானோ சர்வைவஸ்வரிய சம்பன்னனாகிய சிவபெ

ருமான் அனுக்கிரகத்தைப் பெற்றிருக்கின்றேன். இந்திரனுடைய அன்புக்கும் அவன் தவத்திற்கும் தேவ தேவ னாகிய மகாதேவன் கட்டளையின்படி இந்திரலோகத்தில் இருந்துகொண்டிருக்கிறேன். நான் தேவேந்திரனுக்கும் பயந்தவனல்ல, உனக்கும்பயந்தவனல்ல, இவை முதலியவற்றை நீ சிறிதுமெண்ணாது, ஒருபேதைப் பெண் ணினிமித்தம் என்னை அலட்சியம் செய்தனை ஆகையால் நீ பாரதப் போரை முடித்து, இறந்து போயினபின் பழையபடியே விஷ்ணு வாக வைகுண்டத்தை யடையாமல் இம்மண்ணுலகில் அரசமரமா கியிருக்கக்கடவை யென்று சபித்துவிட்டுத் தான் பொன்னுலக மடைந்துவிட்டது. கண்ணன் கேட்டு மிகப்பயமடைந்து ஒன்றுந் தோன்றாதவனாகி வாழ்ந்து வருகையில், ஒருநாள் தான் மார்க்கண் டேயமுனிவரைக் கண்டு, அவர் திருவடியில்விழுந்து நமஸ்கரித்து அவரையொரு ஆசனத்தி லெழுந்தருளச்செய்து, தனக்குப் பாரி சாத விருட்சத்தால் நேர்ந்துள்ள சாபத்தினையும், அதனைப் போக் கடிக்கத்தகுந்த சூட்சியையும் கட்டளையிட்டருளவேண்டு மென்று மிக வேண்டிக் கொள்ள, மார்க்கண்டேயமுனிவர் கண்ணனே! நீ ஏதேனும் ஆலோசியாது செய்து விட்டாய், பாரிசாதவிருட்சம் இலேசான தல்ல, அது கருணைக்கடலாகிய கண்ணுதல் மூர்த்தி தனது வெள்ளியங்கிரியி லுண்டாக்கிய விருட்சம், அது சிவானுக் கிரகத்துடன் விளங்குவது, இந்திரனிடத்தில் பரமேஸ்வரன் வை த்துள்ள அன்பின் மிகுதியால் தெய்வ லோகத்தி லிருக்கும்படி கட்டளையிட்டுள்ளார். இவற்றை நீ யாலோசியாது இத்தகைய தகா தகாரியம் செய்து விட்டனை, ஆயினும் பயப்படற்க உனக்குநேர்ந்த இச்சாபமும் உலகோபகாரமாகவே முடியும், நீ அரசமரமாகவானா லும் நமது சர்வலோக சரண்யனாகிய சர்வேஸ்வரன் திவ்விய தலத் தில் நீ முளைத்து வாழ்ந்துகொண்டிருப்பையேல், ஆனந்தத்தாண் டவ மூர்த்தியாகிய ஐயன் கிருபையால் உன்சாபம் நீங்கப் பெற்று வைகுண்டமடைகுவாய், அதற்குரிய புண்ணிய சொரூபமான திவ் விய தலமானது பூமியின்கண்ணே, தட்சண கைலாசமாகிய காளத் திக்குத் தென்றிசையில் அரணிநதி என்னும் ஒரு புண்ணிய ஆற் றங்கரையில் மாகதவல்லி சமேதராக வரமூர்த்திநாதர் எழுந்தருளி யிருக்கின்றனர், அங்கடைந்து அரசமரமாக விருக்கக்கடவாய், அத்தலத்தில் முளைத்த புல் புழு முதலியவும் மோட்சமடைவதிற் றடையில்லை, அத்தலத்திலுள்ள தீர்த்தமெல்லாங் கங்கையேயா

கும், அங்குள்ள விருட்சங்களெல்லாம் கற்பகத்தருக்களேயாகும், அத்தலத்திலுள்ள மனிதர்களெல்லாம் தேவர்களேயாகும். அங்குச் செய்யும் தருமமொன்று கோடியாக வளரும். அங்கு ஒருசிவனடியார்க்கு அன்னமிடில் அன்ன மொன்றுக்கு ஒரு யுகம் கைலாசத்தில் வாழும் பாக்கிய முண்டாகும் என்று சொல்லிவிட்டு மார்க்கண்டேயர் சென்றனர்.

கண்ணன் மார்க்கண்டேயமுனிவர் வார்த்தையைக் கேட்டு ஆனந்த மடைந்து, துவாரகையில் பலவாண்டு வாழ்ந்து தனக்கு ஆயுள் பூர்த்தியாயினபின் ஆரணிநதி தீரத்திலுள்ள அரியதுறையில் அரசமரமாக முளைத்து, மரகதவல்லி சமேதரான வரமூர்த்திநாதர் திருவடியிணையே மனதில் தியானஞ்செய்து கொண்டு ஆயிரம் வருட மிருந்தனர். ஒருநாள் அகண்ட வைபவ சச்சிதானந்தப் பிழம்பாகிய பரசிவப் பிரபு பச்சிளங்கிள்ளையாகிய பார்வதி யாருடனே இடபவாகனரூடராய் மான் மழு சதுர்புஜ காளகண்ட திரிநேத்திர தாரியாய் எழுந்தருளி காட்சி தந்து அரசமரத்தினை நோக்கி விஷ்ணுவே! வெளிவாக் கடவாயென்றவுடன் அரசமாக விருந்த விஷ்ணு எதிர்வந்து ஜெகதீஸ்வரன் திருவடியில் விழுந்து எழுந்து நின்று வணங்க, சுவாமி அவரைப் பார்த்து அன்பனே! உனக்கு என்னவர வேண்டுமெனக் கேட்க, விஷ்ணுவானவர் இரண்டுகரங்களையும் சிரமேற் குவித்து, எனை யடிமையாக யாட்கொள்ளவந்த கிருபாநிதியே தேவரீர் திருவருள் நோக்கத்தால் யாதொரு இடையூறின்றி இரட்சகத் தொழிலை நடத்திக்கொண்டு வைகுண்டத்தில் தேவரீர் திருவடி தியானத்துடன் வாழ்ந்து வருகிறேன். இதைக் காட்டிலும் எனக்கு வேண்டிய வரமென்ன விருக்கிறது, ஐயனே! நான் இதுகாறும் இப்புண்ணியத்தலத்தில் அடியேன் அரசமரமாக விருந்தபடியால் இம்மரம் எந்நாளும் இத்தலத்தி லிருந்துகொண்டிருக்க வேண்டும். யாரொருவர் இந்த அரசவிருட்சத்தினை மூன்றுதரம் பிரதட்சணம் செய்து தேவரீரை வந்து வணங்குகின்றார்களோ அவர்கள் இம்மையில் தீர்க்காயுளும் நோயற்றவாழ்வும், நன்மனைவியும் சிறந்த புத்திர பௌத்திரர்களும், சகலசம்பத்தும் பெற்று வாழ்ந்து மறுமையில் தேவரீர் திருவடியினிழலில் வாழும் சாம்பிராச்சியத்தினைத் தந்தருள வேண்டுமெனப் பிரார்த்திக்க

அம்மனமே ஆருக வெனக் கடாட்சித்தருளிச் சுவாமி அந்தர்த்தானமாயினர். விஷ்ணுவும் வைகுண்டமடைந்து சுகமாக வாழ்ந்து வந்தனர்.

கண்ணனரசமரமானசருக்கம்

முற்றுப்பெற்றது.

---

## பூத்தகுளமான்மியச்சருக்கம்.

சிவானுபவச் செல்வர்களே! இவ்வரியதுறையின் பெருமையை இன்னுஞ் சொல்லுகிறேன் கேளுங்கள். முன்பு ஓர் காலத்திலே ஒரு குரங்கானது காட்டில்விளையாடிக்கொண்டிருக்க, அதைக் கண்ட வேடனொருவன் அதைப் பிடிக்க எண்ணுகையில் அது அங்குமிங்கு மோடி அரியதுறைக்குச் சமீபத்தில் வந்து அங்கிருந்த பூத்தகுளத்தில் விழுந்து எழுந்து ஓடியது, பின்னும் வேடன் அதனைத் தொடர, அது பயந்து விரைவாகச் சென்று அரசமரத்தைச் சுற்றிக்கொண்டு கோயிலுட் பிரவேசிக்க, அச்சமயம் பிரதோஷ காலமாகையால் அங்கு நடந்துகொண்டிருந்த சோடசாலங்கார தீபாராதனையைப்பார்த்துக்கொண்டே மதிலேறிக் குதித்துப் பதுங்கிவிட்டது. வேடன் குரங்கினைக் காணாது திரும்பிப் போய் விட்டனன். சிலநாளைக்கெல்லாம் குரங்கு இறந்துவிட அது மரகதாம்பாள் அவதாரம் செய்த செங்கழுநீர்ப் பூத்த திருக்குளத்தில் முழுகியதாலும், விஷ்ணு வடிவமாயுள்ள அரசமரத்தைச் சுற்றியதாலும் வரமூர்த்திநாதர் ஆலயத்தில்பிரவேசித்ததாலும், அங்குநடந்தேறிய தீபாராதனையைப் பிரதோஷ காலத்தில் தரிசித்ததாலும் அடுத்த சென்மத்தில் காஞ்சிபுரத்திலே இராஜகுஞ்சரச்சோழனாகப் பிறந்து மனுநீதி தவறாது மன்னுயிரெல்லாம் தன்னுயிர்போலக் காத்து அரசாண்டு வருங் காலத்தில், ஒருநாள் பூர்வ சன்மவாசனையால் மனைவி மக்கள் சுற்றத்தார் நண்பினர்களுடனே, புரோகிதர்கள் சேனைகள் சேனைத்தலைவர்கள் புடைசூழ அரியதுறையடைந்து, பூத்த குளத்தில் ஸ்நானஞ்செய்து தம்மினத்தாரோடு வரமூர்த்திநாதர் சந்நிதியடைந்து, சிவலிங்கப்பெருமானுக்குப் பூத்தகுளத்து நீரால் பனிரண்டு குடம் திருமஞ்சனம் செய்து, நூற்

றெட்டு முறை வில்வார்ச்சனை புரிந்து தீப தூபங் காட்டிக் கர்ப்பூர வார்த்தி செய்து தரிசித்து விபூதிப் பிரசாதம் பெற்றுத் திரும்பி மாகதவல்லியார் கோயிலை யடைந்து, வணங்கி மஞ்சள் குங்குமங்க ளால் அருச்சனை புரிந்து வெளிவந்து நூறு பிரமசாரிகளுக்கு நூறு கன்னிகைகளைத் தானஞ்செய்து, இன்னும் பலருக்கு ஆயிரங் கோதானமும், அளவிறந்தசுவர்னதானமும் அளித்துச் சிலநாள் அத்தலத்திலேயே யிருந்து, அக்கோயிலுக்குப் பற்பல பிரகாரங்க ளையும், கோபுரங்களையும், மதில்களையும், உண்டாக்கி அவற்றில் சிறந்த பல இரத்தினங்களையும் பதிப்பித்தான். அதுவன்றிப் பல மண்டபங்களையும் இயற்றினன். இங்ஙனஞ்செய்து அங்கு இருந்து கொண்டிருக்கையில், ஒருநாள் அவ்விடம்வந்த சிவயோகியொருவ னைக்கண்டு வணங்க அவர் அரசனையாசீர்வதித்து அவ்வரசனுடை யபூர்வசென்ம விருத்தாந்த மனைத்துங் கூறி, இராஜனே! உனக்கு இவ்வளவுபாக்கிய முண்டானதற்குக் காரணம் இவ்விடத்திலுள்ள பூத்தகுளமேயாம். இத்தடாகம் அதி பரிசுத்த மானது, இத்தீர்த் தக்கரையில் யாருக்காயினும் அன்ன மிடினும், பிதிர்த்தருப்பணம் புரியினும் அவர்களையும் புண்ணியத்திற்கு அளவே யில்லை. இத் தடாகத்திலே ஜலம் இல்லாவிடினும் வேறு ஜலம் கொண்டுவந்து இத்தடாகத்தில் விட்டுப் பின் அத்தீர்த்தத்தை எடுத்து உட்கொ ளினும், சிரசின் மேல் புரோட்சித்துக் கொள்ளினும் எவ்விதமான விஷங்களும் ஒழியும். இம்மகா தீர்த்தத்தில் ஒருகை ஜலம் உட் கொள்பவர் பின் ஓர்காலத்தும் தாயின் முலைப்பால் அருந்தாது பிறவித்துயர் நீங்கிப் பரமேசுவரரின் திருவடி மலரில் நித்தியான ந்த சுகம் எய்தப் பெறுவர். இப்பூத்த தடாகத்தில் ஒருகுடம் ஜலங் கொண்டு வரமூர்த்திநாதருக்குத் திருமஞ்சனம்செய்விக்கின் குடமொன்றுக்கு ஒருயுகம் கைலாயத்தில் வீற்றிருப்பர். இத்திரு க்குளத்தில் கார்த்திகை சோமவாரத்தன்று கோமயம் கருந்திலம் என்பன வற்றைச் சிரசி லிட்டு ஸ்னானம் செய்பவர் பின் ஓர் பொ ழுதும் பிறவிக்கடலில் முழுகார். அத்தீர்த்தத்திலே தருமதேவ தையின் உள்ளம் மகிழ்வெய்த அமாவாசையில் தத்தம் பிதுர்களுக் குத் தருப்பணமும் ஒருவன் செய்வானாயின் அவன் பிதுர்க்கள் கண்ணுதற்பெருமானது திருவடி மலர்களை அடைந்து என்றும் அழியாத நித்தியானந்த சுகம் எய்தப்பெறுவர். அத்தடாகக்கரை யில் இருந்து சற்பாத்திரமாயுள்ள ஒரு சிவனடியாருக்கு ஒருகவள

அன்னமேனும் இடுவோனாயின் அவன் எக்காலத்தும் கைலையங்கிரியைவிட்டு நீங்காத நல்வாழ்வு பெறுவான். ஒருவர்க்களித்த அத்தான பலன் கோடி அந்தணர்கட்கு மற்றைய விடங்களிலிருந்து அளிக்கும் அன்னதான பலனினும் அதிகமாம். பஞ்சாமிர்தம் பஞ்சகவ்வியம் பழ ரசங்கள் என்பவற்றாலும், ஏலம் இலவங்கம் விலாமிச்சு முதலிய வாசனைத்திரவியங்களைப் பூத்ததடாகத்து நீரிலே கலந்து அத்தீர்த்தத்திலே நூறு குடம் கொண்டு மாகதவல்லிக்கும், வரமூர்த்திநாதருக்கும் மகாபிஷேகம் செய்பவர் எக்காலத்தும் அழியாத சிவபதவியை உறுவர் என்று கூற, இவற்றையெல்லாம் அன்புடனே கேட்டுக்கொண்டிருந்த இராஜகுஞ்சரன் அச்சிவயோகியார் சொன்னபடி கிரமமாகச் செய்துகொண்டிருந்து சிலநாளைக்குப் பின் காஞ்சிபுரமடைந்து வரமூர்த்திநாதரையே தியானஞ்செய்துகொண்டிருந்து சிவசாம்பிராச்சியம் பெற்று வாழ்ந்தனன்.

பூத்தகுளமான்மியச்சருக்கம்

முற்றுப்பெற்றது.

---

## வாழி விருத்தம்.

தவமருளும் வரமூர்த்தி நாதர்மா கதவல்லி சதுரின் வாழ்க
பவமகலும் விபூதிமணி யைந்தெழுத்து நாளும் பரிவின் வாழ்க
சிவனடியர் பாராய ணஞ்செய்யுந் திருமுறைகள் சிறந்து வாழ்க
நவநவமாய் மழைபொழிந்திங்குலகமெலாமிகமகிழ்ந்துநன்குவாழ்க.

---

அறுபான் மும்மை நாயன்மார்களி லொருவராகிய வாயிலார் நாயனார் பரம்பரையில் வந்தவரும், சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவப்பிர வர்த்தகாசிரியரும், மதுரைத்தமிழ்ச்சங்கத்து வித்துவானும், சென்னை மெய்கண்டசந்தானசபையக்கிராசனாதிபதியுமாகிய சிந்தாந்தசரபம்

அஷ்டாவதானம்

**பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்கள்**

இயற்றிய

**அரியதுறைதலபுராணம்**

முற்றிற்று.

---

சிவமயம்.

இந்நூலாசிரியர்மாணாக்கர்

பிரசங்காமிர்தம்

## பாலூர் - வேலுதேசிகரவர்கள்

இயற்றிய

## அரியதுறை

# வரமூர்த்திஸ்வரர்பதிகம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திருவளர் மார்பன் செய்தவத் தாலே
சேண்டவ ழரசெனுந் தாரா
யுருவளர்ந் தோங்கு மருந்துறை மணியே
யுயர்வரை வளைத்திடு மணியே
மருவளர் கொன்றை வேணியார் மணியே
மழுக்கரத் தேந்திய மணியே
குருவளர் வரமூர்த் தீசமா மணியே
கொடுவினை களைந்தருண் மணியே. (க)

மையலா லழிந்த மனத்தினேன் பட்ட
வழுங்கருந் துயரமோ வளவில்
ஐயனே யகற்றி யாளுவா யலையே
லாரெனக் குறவின ரறியேன்
றையலா ளுமையாள் மரகத வல்லி
தழுஉம் வரமூர்த்திநா யகனே
செய்யளா ரரிய துறையநா யகனே
தீவினை களையுநா யகனே. (உ)

அளவறு தவஞ்சே ரோமச முனியி
னாணவ மாதிமும் மலங்க

ளொளியுற வவன்முன் னெழுந்தருள் வழங்கி
யுண்மையை யுரைத்தரு ணாதா
களவறு நெஞ்சி னிறைதரு நாதா
காட்சியா ரருந்துறை நாதா
வளமுறு வரமூர்த்தீசனாம் நாதா
வல்வினை களைந்தரு ணாதா. (௩)

உலகெலா மொற்றைக் குடைநிழ லாண்ட
வுத்தமன் சித்திர சேன
னலகிலாத் தவத்தா லருண்மக ளாகி
யவதரி மரகத வல்லி
நிலைகுலாம் வாம பாகமா ரரசே
நிலையுறு மருந்துறை யரசே
கலையுலாம் வரமூர்த் தீசனா மரசே
கடிவினை களைந்தரு ளரசே. (௪)

திரையணி வீரை சூழ்தரு புவியிற்
செறிசுர நதிவரு மரிய
துறையணி யெந்தை தோகையான் றந்தை
சுடர்மழுப் படையவென் றந்தை
அரவணி வரமூர்த் தீசனா மெந்தை
யமரருக் கருள்செயு மெந்தை
குரவணி யுமையாள் பாகனா மெந்தை
கொடுவினை களைந்தரு ளெந்தை. (௫)

வீழியந் தொண்டைக் கனிநிகர் செவ்வாய்
மெல்லியற் சிமிழ்முலை மயக்காற்
பாழியங் கொடிய செயுமடச் சிறியேன்
பக்குவ மாகுநா ளுளவோ
மாழையங் கண்ணா ளணைவுறும் தேவே
மாணருந் துறையமர் தேவே
வாழிய வரமூர்த் தீசனாந் தேவே
வல்வினை களைந்தரு டேவே. (௬)

எத்தனை சனன மெத்தனை மரண
மெத்தனை யன்னைய ரத்த

ரெத்தனை யுலகங் கொண்டன னந்தோ
    வினியெனு மவையெலாந் தொலைப்பாய்
சுத்தனே யரிய துறையம ரடியார்
    சுத்தனே யுலகெலாம் போற்றுங்
கத்தனே வரமூர்த் தீசனுங் கத்த
    கடுவினை யொழிகருத் தாவே. (எ)

இந்திர னிருடி யாலடை சாப
    விடுக்கணுன் மெலிந்துவந் தடைந்து
சிந்தனை யொடுக்கி யாற்றிய பூசைச்
    சிறப்பினு லவற்கருள் செய்த
சுந்தர வரிய துறையசுந் தரனே
    சொலுமர கதவுமைச் சுந்தர
சுந்தர வரமூர்த் தீசசுந் தரனே
    துயர்வினை களையுஞ் சுந்தரனே. (அ)

மாதரா ரரங்கி னடத்திசை முழவின்
    மாமுனி கேட்டவா னரங்கள்
சீதமே கங்க ளொலியென வஞ்சிச்
    சினைத்தரு மேலிவ ரழகார்
மாதரா ரரிய துறையமர் வேந்தே
    மன்னிய விண்ணவர் வேந்தே
காதரா வரமூர்த் தீசனும் வேந்தே
    கடுவினை களைந்தருள் வேந்தே. (௯)

பண்ணியன் மறைகள் பாடிய பரமே
    பாவையா மரகத வுமையா
ணண்ணிய பரமே நாதவெம் பரமே
    நம்பினோர்க் கருள்செயும் பரமே
புண்ணிய வரிய துறையமர் பரமே
    புனலுறை வேணியார் பரமே
விண்ணியர் வரமூர்த் தீசனும் பரமே
    வெவ்வினை களைந்தருள் பரமே. (௧0)

---

தேவிதுணை.

# அரியதுறை

# மரகதாம்பாள் பதிகம்.

கொச்சகக்கலிப்பா.

சுந்தரியா னந்தபரை சொலற்கரிய விமயவல்லி
எந்தனமையா ளத்தடையே யெனந்தேவி மல்கியசீ
ரந்தரமே தோய்சோலை யரியதுறைப் பேரரசி
யெந்தைவர மூர்த்தீச னிடத்தமர கதவுமையே. (க)

நாராய ணனென்னு நந்துகரன் பின்றோன்றும்
வாராருங் கொங்கையுமை மாதேவி யாண்டருளாய்
ஏராரு மரியதுறை யெந்தைவர மூர்த்தீசன்
பேராரி டப்பாகம் பெற்றமர கதவுமையே. (உ)

செந்நெல்விளை பண்ணைகள்சூழ் சீரோங்கு மரியதுறை
மன்னியபே ரந்தரியே மலையரையன் மாதவமே
அன்னநடைப் பெண்ணரசி யரியவர மூர்த்தீசன்
மின்னியசீ ரோர்பாக மேவுமர கதவுமையே. (௩)

பெய்வளையார் முலைமயக்கம் பேதுற்ற பேர்களுக்குப்
பைதலிலா வீடீயோ மெனப்பகரும் பாமனையே
கைவளையோ டணிமுலையின் கனத்தழும்பு மிகவேற்றி
மையலுறச் செய்தவருந் துறையிமர கதவுமையே. (௪)

அயனரியோ டுருத்திர னு மாயமகேச் சுரனுல்வர்
வியனுறுநாற் காலாகி மிளிர்சதா சிவமஞ்சங் .
கயல்விழிநீ யுறங்குகின்ற கண்ணியத்தை யென்சொல்வா
மயர்விலருந் துறைமேய வம்மைமர கதவுமையே. (௫)

பங்கயற்கண் ணரியபரம் பானுருவே சொலவடங்கா
விங்கயற்கண் ணகனுலக மெண்ணிறந்த வீன்றிட்டுங்
கொங்கையவை தாழாத கோமளமே யரியதுறை
மங்கைநா யகியாளாய் வந்துமர கதவுமையே. (௬)

பண்டாரு மலமயக்கம் பரவையிடை யுழலுயிர்கள்
கண்டாருஞ் சீரருளாற் கணவனு ரடிக்கரையைக்
கொண்டாரச் செயுமனையே கோலஞ் சேரரியதுறை
தண்டாத வெங்தேவி தனியமா கதவுமையே. (எ)

காழிநகர்ச் சம்பந்த கான்முளைக்கு நீகறந்தே
யேழுலக மும்வாழ வினிதருளோ டூட்டியபாற்
காழியன்மா மணிவள்ளங் கழுவியெனு மெற்கூட்டாய்
மாழைமாஞ் செறியரிய துறையமா கதவுமையே. (அ)

பாராண்ட நெடும்புகழான் பார்த்திபன்சித் திரசேனன்
நோரண்ட மாதவத்தா னேரிழைமா மகளாகிச்
சீராண்ட வரமூர்த்தி சனைச்சேர்ந்தோ யெனையாளா
யோராண்ட வரியதுறை யினியமா கதவுமையே. (௯)

திங்களைநேர் வாணுதலாய் சிறியேனுக் கருள்வழங்கி
யிங்குறைவோ ரேனீந்தா யென்றுன்னைக் கேட்பவரார்
பங்கமிலாச் சீர்மேவிப் பாடுபுக ழரியதுறை
யெங்களையாள் நாயகியே யினியமா கதவுமையே. (௧0)

---

## புஷ்பாஞ்ஜலி சூர்ணிகை.

கல்யாண த்ரேஹ கருணகா விஸ்வ ரூபா
கௌரீஸ மன்வித கங்காதா சாம கீதா
பூதாதி சேவ்ய புவன த்ரய ரக்ஷணயா
புஷ்பாஞ் ஜலிர் பவதுதே ஸ்ரீவரமூர்த்தி நாதா.

### ஊசல்.

கருதரிய வேதமா மண்டபத்துட்
கதிர்முத்தா மந்திரமேற் கட்டிதூக்கிப்
பொருவரிய நாற்பாதத் தாம்புபூட்டும்
புகலடங்கா வேதாந்தப் பலகைமீது
மருளிரிய ஞானியர்க ளெல்லாம்வாழ்த்த
மாகதாம்பா ளென்னுமுமை யாளோடு
மருளும்வா மூர்த்தீசா ராடீரூச
லரியதுறை நாயகரே யாடீரூசல்.

சீதளவெண் பளிக்குமா மண்டபத்துட்
டேவி மரகதவுமையோ டாடீரூசல்
பாதலமண் வானுள்ளோர் குறைகள்கூறிப்
பணியவர மவர்க்கீவீ ராடீரூசல்
தீதகலா வெம்மனத்துஞ் சிறந்துவாழுஞ்
செல்வர்வர மூர்த்தீச ராடீரூசல்
ஆதவனம் புலிவிழியீ ராடீரூச
லரியதுறை நாயகரே யாடீரூசல்.

## எச்சரிக்கை.

பாரார் புகழரிய துறைப்பதியார் தருபொருளே
சீரார் வரமூர்த்தீசனே சிவமே எச்சரிக்கை.

திருமா லறியாத மலர்ச்செந்தா ளுடைப்பெரியோய்
கருணா வரமூர்த்தீசனே காவா எச்சரிக்கை.

பாலாழியி லுறைமீனது பாலைப்பரு காப்போன்
மாலாலரு ளுண்ணேன்றுறை மன்னா வெச்சரிக்கை.

மதியார்சடைப் பாகீரதி மன்னுந்திரு முடியாய்
பதியாலருந் துறைமேவிய பகவா எச்சரிக்கை.

கரியமயி டம்மூர்தரு காலன்விழச் சாய்த்த
அரியதுறை தனின்மேவிய அமலா எச்சரிக்கை.

## லாலி.

சீர்மேவு மரியதுறைச் செழும்பதியில் வாசா
செல்வி மாகதவுமையாள் சேர்வர மூர்த்தீசா
நீர்மேவு செய்யசடை நிமல வன்பர்நேசா
நெஞ்சகத்தி னீங்காது நிற்குங் கயிலாசா—லாலி.

சேதாம்பல் வாயுமையாள் சேர்மரும துய்யா
செய்யகரும் பார்படப்பை சேரரிய துறையா
தாதார்தரு கொன்றையணி தழலார் மழுக்கையா
சச்சிதா னந்தவர மூர்த்தீச வையா—லாலி.

## மங்களம்.

இராகம் சுருட்டி — தாளம் ஆதி.

பல்லவி.

வரமூர்த்தியீசனுக்குஞ் செயமங்களம்—எங்கள்
மரகதாம்பாளுக்குஞ் சுபமங்களம்.

பரவுலகுள்ளோரும் பார்க்கவிரும்புகின்ற
அரியதுறைநாதனுக்கு மடியார்கள் துதிக்கின்ற (வரமூர்த்தி)

சரணங்கள்.

கங்கைதரித்தவற்குங் காலனைச்சாய்த்தவற்கும்
அங்கைமழுவினற்கு மானையுரித்தவற்கும்
தங்கச்சொரூபனுக்குந்
தாட்டாமரையனுக்கும்
பங்கமில்வேடனுக்கும்
பாசுபதத்தனுக்கும். (வரமூர்த்தி)

திரிபுரதகனனுக்குந் திரிசுடர்கண்ணனுக்கும்
அரிபரவினனுக்கு மான்மநாயகனுக்கும்
எரிமழுவேந்தினற்கு
மேகம்பமேயவற்கும்
நரிபரியாக்கினற்கும்
நரைவிடைவாகனற்கும். (வரமூர்த்தி)

மங்களநாதனுக்கு மறைமுடிமேலனுக்குந்
திங்கள்சூடினனுக்குஞ் செய்யவேணியனுக்கும்
தங்கத்தவரனுக்குஞ்
சர்ப்பாபரணனுக்கும்
அங்கம்வேய்ந்தவனுக்கும்
அரியதுறையாளனுக்கும். (வரமூர்த்தி)

---

இத்தலபுராணம் விரோதிகிருது ௵ வைகாசி ௴ ௨௨ௗ ஆதிவாரம் இவ்வாலயத்தில் நடந்தேறிய பிரம்மோற்சவ சம்பந்தமாக ரிஷபவாகன தினத்தன்று வாசித்து வெளியிடப்பட்டது.